



# திருக்கோயில்

"என்கடன் பணி செய்து கிடப்பதே"



ஸ்ரீ காலசம்ஹார மூர்த்தி
திருக்கடவூர்.

மாலை 6] குரோதி ஆடி - ஆகஸ்டு 1964 [மணி 11

சென்னை அரசாங்க அறநிலையப்
பாதுகாப்புத் துறை வெளியீடு




‘தருமம்மிகு சென்னையிற்
கந்த கோட்டத்துள் வளர்
**சண்முகத் தெய்வமணி**’

## பொருள் அடக்கம்



ஆண்டுச் சந்தா ரூ. 10/- தனி இதழ் விலை ரூ ஒன்று

## சந்தா தாரர்களுககு வேண்டுகோள்

‘திருக்கோயில்’ இதழின் சந்தாதாரர்கள் ஆகச் சேர விரும்புபவர்கள், “**திரு. ஆணையர் அவர்கள், அறநிலைய ஆட்சித்துறை, சென்னை. 34**” என்னும் முகவரிக்கு ரூபா பத்து அனுப்பி, எப்போது வேண்டுமாயினும் சந்தாதாரர்கள் ஆகச் சேர்ந்து கொள்ளலாம்.

அல்லது, அவ்வவ் வட்டார அறநிலைய உதவி ஆணையர்களின் அலுவலகங்களிலும், மேற்படி சந்தாத் தொகையைச் செலுத்திச் சேரலாம்.

ஓர் ஆண்டின் நடுவில் எந்தமாதத்திற் சேர்ந்தாலும், அடுத்த ஆண்டில் அந்த மாதம் வரையில், 12 இதழ்கள் அனுப்பப் பெறும்.

ஓர் ஆண்டிற்குக் குறைந்த சந்தாத் தொகை ஏற்கப் பெறுவதில்லை.

சந்தாதாரர்கள் தங்களுடைய சரியான முழு முகவரியைத் தெரிவித்தல், இதழ்கள் தவறுமற் சேர்தற்கு மிகவும் இன்றியமையாதது.

—ஆசிரியர்.




மாலை 6] குரோதி ஆடி - ஆகஸ்டு 1964 [மணி 11

# திருக்குறளும், திருநாவுக்கரசரும்

## முன்னுரை :

திருக்குறள் நம் தமிழ்மொழியிலுள்ள சிறந்த இலக்கியங்களுளெல்லாம் தலை சிறந்தது, ஒப்புயர்வற்றது. ''திருக்குறள் ஓர் இலக்கியக் கருவூலம், கவிதைக் குரல் என்பதில் ஐயமே இல்லை. கிரேக்கர்களுக்கு ஹோமரின் காவியம் எத்தகையதோ, அவ்வாறு சொற் சிறப்பும் நீதிச் சிறப்பும் மிகச் சிறந்த முறையில் அமைந்துள்ளது'' என்று சார்லஸ் இ. கவர் (Charles E. Gover) என்பவரும், ''திருக்குறள் தமிழ் இலக்கியத்தின் சிறந்த படைப்பு. மனித சிந்தனையின் சிறந்துயர்ந்த தூய இனிய வெளியீடு'' என்று எம். ஏரியல் (M. Ariel) என்பவரும், ''திருக்குறள் கவிதைச் சுவையும் இலக்கிய இன்பமும் நிறைந்தது. அதன் உள்ளங்கவர் பண்பு ஒப்புயர்வில்லது'' என்று பேரறிஞர் கிரவுல் (Dr. Graul) என்பவரும், திருக்குறளின் சிறப்பினை மிகவும் வியந்து போற்றியுள்ளனர்.

## தமிழ்மொழி யரசி :

திருக்குறளின் சிறப்பை இங்ஙனம் பலவகைகளில் அறிஞர்கள் பலரும் பாராட்டியுள்ளனர். திருக்குறள் தமிழிலக்கியங்களுள் பெற்று விளங்கும் சிறப்பிடத்தினைப் பின்வரும் கருத்தமையக் கவிஞர் ஒருவர் அழகிய கற்பனைத்திறம் அமையப் பாடியுள்ளார்.

உலக மொழிகளுள் தமிழ் மொழியானது தொன்மையும் பெருமையும் மிக்க தூய இனிய உயர் தனிச் செம்மொழி (Classical Language) யாகலின், அதனை உலக மொழிகளுக்கெல்லாம் தலைமையும் பெருமையும் சான்றது எனக் குறிப்பிட விரும்பி, நம்முடைய தமிழ்மொழித் தாயை ஒரு பேரரசியாக உருவகம் செய்கின்றார். அரசியெனின், அரசியர்க்குரிய அணிகலன்களும் பிறவும், தமிழ்த்தாயும் அணிந்து திகழ்வதாக அமைவுற ஆய்ந்து கூறுதல் வேண்டும். அது கருதி, அவர் தமிழிலுள்ள பெருங்காப்பிய நூல்களை யெல்லாம், தமிழ்த்தாய் ஆகிய பேரரசியின் சீரிய அணிகலன்களாகச் சிறப்புறக் குறிப்பிடுகின்றார் !

## திருக்குறட் செங்கோல் :

தமிழ்த்தாய் ஆகிய பேரரசி குண்டலகேசி எனும் காப்பியத்தினைக் காதிற் குண்டலமாகத் தரித்திருக்கின்றாள் ; வளையாபதி என்னும் காப்பியம் தமிழ்த்தாயின் கைகளுக்கு வளையல்களாக மிளிர்கின்றது ; அவளுடைய கருணை நிறைந்த மார்பில், ஒரு மணிமுத்தாரம் போலச் சிந்தாமணி

என்னும் செந்தமிழ்க் காப்பியம் நந்தா ஒளி பரப்பு கின்றது; அவள் தன் மெல்லிய இடையில் மணிமேகலை என்னும் மாண்புயர் காப்பியம் அணி செய்து வயங்குகின்றது; அவளுடைய தாமரை போன்ற திருவடிகளில், 'நெஞ்சையள்ளும் செஞ் சொற் சிலப்பதிகாரம்' சிலம்புகள்போல மெல்லென ஒலித்து மிழற்றுகின்றது; தமிழ்த்தாய் மொழி களின் பேரரசியாதலின், தன்னுடைய அரசியல்பு புலனாகும் வண்ணம் தோலாமொழித் தேவர் இயற்றிய சூளாமணி என்னும் காப்பியத்தினைப் பொன்முடியாகச் சூடிப் பொலிந்து விளங்குகின் றாள்; அரசியர் நடாத்தும்நீதியும்நேர்மையும்மிக்க ஆட்சிமுறையின் அருமைப்பாட்டினைத் திறம் படக் குறிக்கும் அடையாளமாகத் திகழ்வது செங் கோல்! ஆதலின், தமிழ்த்தாய் ஆகிய பேரரசி பெருஉலகிலேயே நீதி நூல்களுள் தலைசிறந்த நூல் ஆகிய திருக்குறள் என்னும் தெய்வத் திரு நூலினைத் தன்னுடைய செங்கோலாகத் தாங்கி அரியணை வீற்றிருக்கின்றாள்!

''காதொளிரும் குண்டலமும், கைக்குவளை
யாபதியும், கருணை மார்பின்
மீதொளிர்சிந் தாமணியும், மெல்லிடையில்
மேகலையும், சிலம்பார் இன்பப்
போதொளிர்பூந் தாளிணையும், பொன்முடி
சூளாமணியும், பொலியச் சூடி
நீதியொளிர் செங்கோலாய்த் திருக்குற
ளைத்தாங்குதமிழ் நீடு வாழ்க''

—ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்

இவ்வரிய இனிய பாடலின்கண் நீதிநூல்களுள் தலை சிறந்த திருக்குறள், நீதி ஒளிரும் செங் கோலாக உருவகம் செய்யப் பெற்றிருப்பது, எத்துணைப் பொருத்தமும் சிறப்பும் மிக்கது என்பது சொல்லாமலே விளங்கும்! திருக்குறளின் சிறப்பினைச் செவ்விதின் விளக்குதற்கு இப்பாடல் ஒன்றே சாலும் அன்றோ!

## திருக்குறளின் இலக்கியச் சிறப்பு :

திருக்குறள் ஒரு நீதிநூல் மட்டுமன்று! ஒரு சிறந்த இலக்கியமும் ஆகும். இலக்கியங்களின் சிறப்பினை விளக்கப்புகும் டபிள்யு. எச். ஹட்ஸன் என்னும் ஆங்கிலப் பேராசிரியர், வில்லியம் ஷேக்ஸ்பியர் தாம் இயற்றிய ''ஆண்டனியும் கிளியோபேட்ராவும்'' என்னும் நாடக நூலில் கிளியோபேட்ராவைப் பற்றிப் புகழ்ந்து கூறும் வரிகள், இலக்கியங்களின் சிறப்பியல்பை விளக்கு தற்கும் கூடப் பொருந்தும் எனக் குறிப்பிடுகின் றார்*. அவர் தம் கூற்றைத் தழுவி, நாமும் அப் புகழுரை வரிகள் நம் திருக்குறளுக்கும் கூடப் பொருந்தும் எனப் புகலலாம்.*

காலத்தால் வாடிக் கழியாது; பன்னலமார்
சீலத்தாற் குன்றாச் சுவைதிகழும்—
சாலத்தான்
ஊட்டிப் பசிபெருக்கும்; ஓங்குதிரு
வள்ளுவர் நூல்
மாட்சிக் கிணையுண்டோ? மற்று*

—ஆசிரியர் மொழி பெயர்ப்பு

## திருநாவுக்கரசர் :

இத்தகைய சிறந்த திருக்குறள் நூலினை, அது தோன்றிய காலம் முதல் ஏறத்தாழ இவ் விரண்டாயிரம் ஆண்டுகளாகப் போற்றி மகிழாத சான்றோர்கள் எவரும் இல்லை. ஆழ்வார்களும் நாயன்மார்களும் கூட, இவ்வரிய இனிய திருக்குறளைத் தழுவிப் போற்றி மிகவும் வியந்து, தத்தம் பாடல்களில் ஏற்ற பெற்றி குறிப்பிட்டுப் பாடி மகிழ்ந்துள்ளனர்.

இதனை விளக்குவதற்கு எத்தனையோ பல சான்றுகளைக் காட்டலா மாயினும், ஈண்டுச் சிறப்பாகத் திருநாவுக்கரசர் ஒருவரை மட்டுமே எடுத்துக்கொள்ளுதல் அமையும். தாம் தம் இளமைக் காலத்திலேயே சிவபிரானைத் தொழு துய்ய முயலாமல், அயற்சமயம் சார்ந்து அல்லற்பட நேர்ந்த அவலநிலை குறித்து, மிகவும் கழிவிரக்கம் பாராட்டி வருந்துகின்றார் திருநாவுக் கரசர்!

## பழமொழித் திருப்பதிகம் :

அந்நிலையில். அவர் திருவாரூரிற் பாடிய திருப்பதிகம் 'பழமொழித் திருப்பதிகம்' எனப்படும். அத்திருப்பதிகத்தின் கண், நாம் அனைவரும் நன்கறிந்த,

---

" It is just because their books deal with unrivalled insight, grasp and power, with the things which are universally and permanently interesting with the experiences, motives, and passions, the struggles, joys and sorrows, which belong to the common foundations of human life, everywhere and at all time — that '**age cannot wither**' them '**nor custom stale**' their '**infinite variety.**"

—**William Henry Hudson,**
The Study of Literature, P. 310

" Age cannot wither her; nor custom stale
Her infinte variety; other women cloy
The appetite they feed; but she makes hungry
Where most she satisfies."

—**Shakespeare.**

"இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று"

என்னும் திருக்குறளை,

"மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த
மேனியான் தாள்தொ ழாதே
உய்யலாம் என்றெண்ணி உறிதூக்கி
உழிதந்தென் னுள்ளம் விட்டுக்
கொய்யுலாம் மலர்ச்சோலைக் குயில்கூவ
மயிலாலும் ஆரூ ரரைக்
கையினால் தொழாதொழிந்து கனியிருக்கக்
காய்கவர்ந்த கள்வ னேனே"

என்னும் திருப்பாடலில் அழகுற அமைத்துப் பாடியருளி யிருக்கின்றார்.

திருநாவுக்கரசர் திருக்குறளைச் சிறப்புறப் போற்றியவர்; அதனைத் தெளிவுறப் பயின்றவர்; அதன் சொற்பொருள் நலங்களில் பெரிதும் ஈடுபட்டுத் திளைத்தவர் என்பதற்கு, இதனினும் சிறந்த சான்று பிறிதொன்றும் வேண்டுமோ?

"நெருநல் உளன்ஒருவன்
இன்றில்லை என்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு"

எனவரும் திருக்குறளை நினைவுகூர்ந்து, நம்மையும் நினைப்பிக்கும் வகையில்,

"இன்றுளார் நாளை யில்லை எனும்பொருள்
ஒன்றும் ஓரா துழிதரும் ஊமர்காள்
அன்று வானவர்க் காக விடமுண்ட
கண்ட னார்காட்டுப் பள்ளிகண் டுய்மினே"

என்னும் திருக்குறுந்தொகையைத் திருநாவுக்கரசர் அருளிச் செய்திருத்தல் காணலாம்.

திருநாவுக்கரசர் திருக்குறளை எங்ஙனம் மதித்துப் போற்றி ஈடுபட்டு, அதனைத் திறனறிந்து ஆராய்ந்து தெளிந்து கற்றுக் கைவந்தவர் என்பதனை விளக்க, அவர் அருளிச் செய்த ஒரு திருத்தாண்டகத்தினை மட்டும் ஈண்டுக் கண்டு அமைவோம்:

## திருத்தாண்டகம்;

இந் நாளில் பல்வேறு இதழ்களிலும் சிறுகதை, தொடர்கதை, புதினக் கதை, காதற் கதை எனப் பல கதைகள் வெளி வருவதைக் காண்கின்றோம். நமது திருநாவுக்கரசர் பெருமானும், ஒரு சிறு கதை எழுத்தாளர் நிலையில் அந்நாளில் விளங்கி யிருந்திருப்பார் போலும்! அவர் தாமும் இந்நாளைய எழுத்தாளர்களைப் போலவே, ஒரு காதற் கதையை—சிறுகதையை—நமக்கு ஒரு திருந்நாண்டகம் வாயிலாக எழுதிக் காட்டுகின்றார்.

ஓர் ஊரில் ஒரு செல்வக் குடும்பத்தில் ஒரு பெண் பிறந்தாள். தாய் தந்தையால் அவள் பெரிதும் பேணி வளர்க்கப் பெற்றாள். தக்க பருவமுற்றாள். பெற்றோர் அவட்குத் திருமணம் செய்து வைக்கும் முயற்சியில் தலைப்பட்டனர். தக்கவன் ஒரு நம்பிக்குத் தம் நங்கையைக் கொடுக்கத் தாய் தந்தையர்கள், உறவினருடன் குணம் பேசிக் குலம்பேசித் திருமணத்திற்கு ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தனர். அத் திருமணப் பேச்சின் விவரங்களையெல்லாம் தோழியின் வாயிலாக மணமகள் அறிந்து மகிழ்ந்து கொண்டிருந்தாள்.

தோழியின் வாயிலாகத் தன்னை மணக்க இருக்கும் ஆடவனின் பெயரை மணமகள் முதலிற் கேட்டறிந்து கொண்டாள். அப்பெயர்தானே, அவளுக்கு மிகமிக இனித்தது. பின்னர் அவனது வடிவழகும் குண நலன்களும் இன்னின்ன பெற்றியவை என உசாவி உசாவித் தெரிந்து கொண்டாள். இதற்கும் பின்னர் அவனது ஊர் யாது? (நகர்ப்புறமா, நாட்டுப்புறமா) எனவும் வினவி உணர்ந்து கொண்டாள். இவையனைத்தும் அவளுக்குப் பெரிதும் மன நிறைவை யளிக்கும் வகையிலேயே மேலும் மேலும் அமைந்தன.

ஆதலின், அத்துணை அரிய பெரிய சிறப்புக்கள் அமைந்த அவ் ஆண்மகனையே மணந்து கொள்வேன் என்று, உறவினருடன் தானும் உளம் உவந்து இசைந்தாள்; உறுதிபூண்டாள். ஒரு கணமும் ஊழியாகும் நிலையில் திருமணம் நிகழ இருக்கும் நாளை ஆவலுடன் எதிர்நோக்கி நின்றாள். திருமணம் சிறப்புற நிகழ்ந்தது. பின்னர்ப் பிறந்தகம் விட்டுப் பெயர்ந்து, புகுந்தகம் செல்ல வேண்டிய நாள் போந்தது. தன்னை இத்துணை காலம் போற்றி வளர்த்த அன்னையையும் தந்தையையும் மறந்தாள். நென்னல் வந்த தலைவனுடன் இணைந்து இயைந்து, விரைந்து செல்லத் துடிதுடித்து முற்பட்டாள். இல்லிகவாப் பருவத்தில் தனக்கு விதிக்கப் பெற்றிருந்த கட்டுப்பாடுகளை யெல்லாம் துறந்தாள். தன்னலம் மறந்தாள். கணவனின் நலமே கருதி வாழ முற்பட்டாள். வாழ்விலும் தாழ்விலும், இன்பிலும் துன்பிலும், கணவனின் திருவடிகளையே புகலிட

மாகக் கொண்டு, அவனுடன் பிரிவற இயைந்து ஒன்றி நின்று இன்புற்று வாழ்ந்து வந்தாள் ..... என்பது, திருநாவுக்கரசர் நமக்காக எழுதி வெளியிட்ட அழகியதொரு சிறுகதை—இனிய சிறந்த கவிதை!

"முன்னம் அவனுடைய
நாமம் கேட்டாள்!
மூர்த்தி அவனிருக்கும்
வண்ணம் கேட்டாள்!
பின்னை அவனுடைய
ஆரூர் கேட்டாள்!
பெயர்த்தும் அவனுக்கே
பிச்சி யானாள்!

அன்னையையும் அத்தனையும்
அன்றே நீத்தாள்!
அகன்றாள் அகலிடத்தார்
ஆசா ரத்தைத்
தன்னை மறந்தாள்!
தன்நாமம் கெட்டாள்!
தலைப்பட்டாள் நங்கை
தலைவன் தாளே!

எனவரும் அனைவரும் அறிந்த சிறந்த திருப்பாடலில், இவ்வினிய சிறுகதை எழிலுற அமைந்துள்ளது.

## திருத்தாண்டகத்தின் சிறப்பு:

'ஒரு முறை கேட்ட அளவிலேயே உள்ளம் கொள்ளை கொள்ளுவது எதுவோ, அதுவே சிறந்த கவிதை யாகும்' என்பர் அறிஞர்கள். அதற்கேற்ப, முதன் முறையாகக் கேட்ட மாத்திரத்திலேயே எவருள்ளத்தையும் கொள்ளை கொண்டுவிடும் அழகும் ஆற்றலும் மிக்க இத் திருப்பாடலின் சிறப்பை, எம் ஒரு நாவாற் கூறுதல் ஒல்லுமோ?

சேமமிகும் திருவாத
வூர்த்தேவென் றுலகுபுகழ்
மாமணியே நீஉரைத்த
வாசகத்தை எண்ணுதொறும்
காமமிகு காதலன்தன்
கலவிதனைக் கருதுகின்ற
ஏமமுறு கற்புடையாள்
இன்பினும்இன் பெய்துவதே.

என இராமலிங்க அடிகளார் பாடியருளியவாறு போல, காதலுணர்வின் வயப்பட்ட ஒரு கன்னிப் பெண்ணின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை மட்டுமேயன்றி, இறையருளுணர்வு தலைப்பட்ட அடியவர்களின் உள நெகிழ்ச்சி அனுபவங்களையும்கூட, இப் பாடல் ஒருங்கியைத்து உளம்களிப்ப உணர்த்துதல் காணலாம்.

"இந்திய நாட்டில், காதலர்கள் தம்முள் ஒருவரை ஒருவர் முதன் முதலாகக் கண்களால் நோக்குறுதல் தொடங்கித், தம்முணர்விழப்பு எய்தும் வரையில், மனிதவியற் காதல் நிலைகள் யாவுமே புனிதம் மிக்க ஆன்மிகப் பொருட்குறிப் புடையதாக விளங்குகின்றன. உணர் வரிய சிறந்த சமய நுண்பொருட் கருத்துக்களை உணர்த்துதற்கண், பாலியற் கருத்துருவகங்கள், தடையின்றி அங்கங்கே நேரிதின் வழங்கப் பெற்று வருகின்றன" எனக் கலையியற் பேரறிஞர் திரு. ஆனந்த குமாரசாமி அவர்கள் கூறுதலும் ஈண்டு உணரத் தக்கது.*

## நாமங் கேட்டாள்: (!)

தமது காதற் குரியவரின் பெயர் கேட்டு மகிழ்தல் காதலர்களுக்கு இயல்பு. அங்ஙனமே தாம் வழிபடும் கடவுளின் திருப்பெயர் கேட்டலில் அடியார்களுக்குப் பெருமகிழ்வு. "சிவனெனும் நாமம் தனக்கே யுடைய செம்மேனி அம்மான்" "சிவனெனும் ஓசை அல்லது அறையோ உலகில் திருநின்ற செம்மை உளதே?" எனச் சான்றோர்கள் தம் வழிபடு கடவுளரின் திருப்பெயரில் தமது ஈடுபாட்டினைப் புலப்படுத்தி யுள்ளமை காணலாம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் தாம் காதல் கொள்ள நேர்ந்த அம்மையாரின் பெயர் 'பரவை' எனச் செவி மடுத்ததும், 'பரவை' என்னும் அப்பெயரையே பல்கால் திரும்பத் திரும்பச் சொல்லிச் சுவைத்து மகிழ்ந்ததும்; அசோக வனத்தில் இருந்த சீதை, அநுமன் இராம நாமத்தைச் சொல்லக் கேட்டுப் பெரிதும் இன்பம் எய்தியதும்; திருஞானசம்பந்தர் சீர்காழிப் பெருமானின் திருநாமத்தை ஒருகாலேனும் கூறித் தம்மைக் களிப்புறச் செய்யும் வண்ணம் கிளிப்பிள்ளையை வேண்டுவதும் போன்றுவரும் பாடல்கள் பலவும், இவ்வுண்மையை வலியுறுத்தும்.

பேர்பரவை: பெண்மையினிற்
பெரும்பரவை, விரும்பல்கு
லார்பரவை; அணிதிகழும்
மணிமுறுவல் அரும்பரவை;

---

* "In India, the conditions of human love, from the first meeting of eyes to ultimate self-oblivion, have seemed spiritually significant, and there has always been a free and direct use of sexual imagery in religious symbolism".

—**Dr. Ananda K. Coomaraswamy,**
The Transformation of Nature in Art, P. 44.

சீர்பரவை ஆயினுள்,
திருவுருவின் மென்சாயல்
ஏர்பரவை இடைப்பட்ட
என்ஆசை எழுபரவை!
— பெரியபுராணம்

அரக்கனே ஆக! வேறோர்
அமரனே ஆக! அன்றிக்
குரக்கினத் தொருவ னேதான்
ஆகுக! கொடுமை ஆக!
இரக்கமே ஆக! வந்திங்கு
எம்பிரான் நாமம் சொல்லி
உருக்கினன் உணர்வைத்! தந்தான்
உயிர்!இதின் உதவி யுண்டோ?
—கம்பராமாயணம்

சிறையாரும் மடக்கிளியே!
இங்கேவா தேனெடுபால்
முறையாலே உணத்தருவன்!
மொய்பவளத் தொடுதரளம்
துறையாரும் கடற்றோணி
புரத்தீசன் துளங்கும்இளம்
பிறையாளன் திருநாமம்
எனக்கொருகாற் பேசாயே!
—சம்பந்தர்தேவாரம்

வண்ணங் கேட்டாள்: (2)

தமது காதற் குரியாரின் வடிவழகையும் குண வழகையும் கண்டும் கேட்டும் நினைத்தும் களித் தும் மகிழ்தல் காதலர்கட்கு இயல்பு. அங்ஙனமே தம் வழிபடு கடவுளின் திருவுருவ நலங்களிலும் அருளிச் செயல்களிலும் அடியவர்கட்குப் பேரீடு பாடு நிகழும்.

வடிவேறு திரிசூலம்
தோன்றும் தோன்றும்!
வளர்சடைமேல் இளமதியம்
தோன்றும் தோன்றும்!
—அப்பர் சுவாமிகள்

கருப்பூரம் நாறுமோ?
கமலப்பூ நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய்தான்
தித்தித் திருக்குமோ?
—ஸ்ரீ ஆண்டாள்

என்பன போன்று வரும் திருப்பாடல்கள், இவ் வுண்மையினைச் செவ்விதின் உணர்த்தும்.

ஆரூர் கேட்டாள்: (3)

தம்மால் விரும்பப் படுபவரின் ஊர்கேட்டு உணர்ந்து உவப்புறுதல், காதலர் தம் செயல். அவ்வாறே தம் வழிபடு கடவுளின் தலவிசேடங் களை அறிந்துகொள்ள விரும்புதல் அடியவர் களின் பண்பு.

பத்தரெலாம் பார்மேற்
சிவபுரம்போற் கொண்டாடும்
உத்தர கோசமங்கை யூர்.
—மணிவாசகர்

"ஆணையால் நீர்என்னைக்
காக்க வேண்டில்
ஆய்ப்பாடிக்கே என்னை உய்த்திடுமின்"
—ஸ்ரீ ஆண்டாள்

பிச்சி ஆனாள்: (4)

காதலரின் ஊரும் பேரும் உருவும் சிறப்பு டைமை தெளிந்ததற் பின், அனைய சிறப்பின ரையே மணம் புரிந்து கொள்வேன் என உறுதி கடைப் பிடித்துப் பித்துற்று நிற்றல், காதலர்கள் நெறி. 'உத்தமன் அத்தன் உடையான் அடியே நினைந்துருகி மத்த மனத்தொடும் மால் இவன் என்ன மனநினைவில் ஒத்தன ஒத்தன சொல்லிட ஊரூர் திரிந்து எவரும் தத்தம் மனத்தன பேசத்" தம்வயம் இழந்து பித்தராய் ஒழுகுதல் அடியவர் களின் பெற்றிமை.

"எனைநான் என்ப தறியேன்
பகல்இர வாவதும் அறியேன்
மனவா சகம்க டந்தான் எனை
மத்தோன் மத்தன் ஆக்கினான்"
—மணிவாசகர்

ஊனிடை ஆழிசங் குத்தமர்க் கென்று
உன்னித் தெழுந்தஎன் தடமுலைகள்,
மானிட வர்க்கென்று பேச்சுப்படில்
வாழகில் லேன்கண்டாய் மன்மதனே!
—ஸ்ரீ ஆண்டாள்

அன்றே நீத்தாள்: (5)

எத்தனையோ பாடுபட்டுத் தம்மை இனிது வளர்த்த தாய்தந்தையரைப் பிரிந்து, தம்மை மணந்து கொண்ட கணவர் பின்னே செல்லுதல், காதற் கடம்பூண்டு கற்பு நெறி நிற்கும் மகளிர் வழக்கம். தன்னைப் பிரிந்து விட்டு, மகள் தலைவ னோடு உடன் போகுச் சென்றமை குறித்து வருந்தும் ஒரு தாய்க்கு, முக்கோற் பகவர்கள் ஆறுதலுரைகள் மொழியும் நிலையில் வரும்,

**இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின்!**
**சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்!**
**அறந்தலைப் பிரியா ஆறும்மற் றதுவே!**

—பாலைக்கலி

எனவரும் கலித்தொகைப் பாடலும் இவ் வுண்மைக்குச் சான்று பகரும். அங்ஙனமே கடவுளுணர்வு தலைப்பட்ட அடியவர்களும், தம்மொடு பன்னெடுங் காலமாகப் பயின்று, தாயும் தந்தையும் பிறரும் போன்ற நிலைகளில் விளங்கி வந்த பொறிபுலன் கரணங்களை யெல்லாம் நீத்துத் தாம் காதலித்த கடவுட் செம்பொருளையே தேடிப் பின் பற்றிச் சென்று, கண்டு மகிழ்ந்து நலம்பெறும் இயல்புடையவராவர்.

### அகன்றான் அகலிடத்தார் ஆசாரம்: (6)

"நிறை எனப்படுவது மறைபிறர் அறியாமை" என்னும் அகலிடத்தார் ஆசாரம் காத்து ஒழுகி வந்த காதலர்கள், இல்லற வாழ்வில் தமக்குள் அதனைச் சிறிது தவிர்ந்து ஒழுகலுறுவர். அங்ஙனமே கடவுளுணர்வு கைகூடிய ஞானிகளும், 'தேசம் இடம் காலம் திக்கு ஆசனங்கள் இன்றிச் செய்வது ஒன்று போற் செய்யாச் செயலதனைச் செய்து, பாலருடன் உன்மத்தர் பசாசர் குணம் மருவிப் பாடலினோடு ஆடலிவை பயின்று" 'உலகியற் பகையார்' என்னும் நிலையில்,அகலிடத்தார் ஆசாரங்களை அகன்றொழுகுவர்.

### தன்னை மறந்தாள்: (7)

தன்னலத்தை அறவே மறந்து, தாம் விரும்பும் காதலரின் நலத்தையே தமது நலமாகக் கருதிப் போற்றி ஒழுகுதல், காதற் காரிகையர் இயல்பு. கோவலனொடு கூடிப் புகார் நகரத்தினின்று மதுரைமா நகர் நோக்கிப் பாலைநில வழியே போய்க் கொண்டிருக்கும் கண்ணகி, வெப்பம் மிக்க அப் பாலைநில மணலில் தன்கால்கள்கொதித்துக் கொப்புளித்ததற்குச் சிறிதும் வருந்தாமல், தன் கணவனாகிய கோவலனின் கால்கள் வருந்துமே என்று எண்ணி, அதற்காகவே நடுங்கு துயர் கூர்ந்து நாப்புலர வாடினாள்.

**வண்ணச் சீறடி மண்மகள் அறிந்தில்ள்**
**கடுங்கதிர் வெம்மையிற் காதலன் தனக்கு**
**நடுங்குதுயர் கூர நாப்புலர வாடித்**
**தன்துயர் காணுத் தகைசால் பூங்கொடி**

—சிலப்பதிகாரம்.

ஞானிகளும் இங்ஙனமே தம் முணர்வு முற்றும் மறந்து, எல்லாம் இறையுணர்வாகவே காணப் பெறுவர். "பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர். பதார்த்தங்கள் பாரார்." "எனை நான் என்பது அறியேன் . பகல் இரவாவதும் அறியேன்" "ஊன்கெட்டு உயிர் கெட்டு உணர்வுகெட்டு என் உள்ளமும் போய் நான் கெட்டவா பாடித் தெள்ளேணம் கொட்டாமோ?" "நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே?" "ஆயக் கடவேன் நானோதான்? என்னதோ இங்கு அதிகாரம்? காயத்து இடுவாய் நின்கழற்கீழ் வைப்பாய் கண்ணுதலே""என்னை மறந்து இருந்தேன் இறந்தே விட்டது இவ்வுடம்பே" என்றெல்லாம் அருளிச் செய்யும் நிலையில் வைகுதல் ஞானிகள் நிலை.

### தன் நாமம் கெட்டாள்: (8)

திருமணத்திற்கு முன்னர் இன்னார் மகள் எனவும், அதன் பின்னர் இன்னார் மனைவி எனவும் குறிப்பிடப்பட்டுப் பெண்கள் பெயர்த் திரிபுறுதல் உலகத்தியற்கை. அங்ஙனமே கடவுளுணர்வு தலைப்படுமுன்னர்ப் பலதிறப் பெயர்கள் வழங்கப் பெற்றிருந்து, கடவுளுணர்வு தலைப்பட்ட பின்னர்ப் பண்டைக் குலம் ஒழிந்து தொண்டக் குலத்தினராகிப் பக்தர் சித்தர் அன்பர் அடியார் என்னும் பலவகைப் பெயர்களைப் பெறுதல், அருளாளர்களின் பண்பு.

### தலைப் பட்டாள் தலைவன் தாளே: (9)

இன்பிலும் துன்பிலும், வாழ்விலும் தாழ்விலும், வறுமையிலும் வளமையிலும் கணவனின் திருவடிகளையே புகலிடமாகக் கொண்டு, கற்புடை மகளிர் ஒழுகுவர். அவ்வாறே ஞானிகளும் "இடரினும் தளரினும் எனதுறுநோய் தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்" எனும் நிலையில் இறைவன் தாளே தலைப்பட்டு நிற்பர்.

இன்னோரன்ன உண்மைகள் எத்துணையோ பலப்பல இனிதமைந்து விளங்கும் வண்ணம் திருநாவுக்கரசர் பெருமான் எழுதிக் காட்டிய இச் சிறுகதைத் திருப்பாடல், எத்துணைச் சிறந்த தொன்றாகத் திகழ்கின்றது பார்மின்கள்! திருமுறைகளின் சிறப்பை யுணர்த்துதற்கு இவ்வொரு திருப்பாடலே அமையும். "இதன் அளவு உண்டு கோள் மதிவல்லோர்க்கே."

### திருக்குறளும் திருத்தாண்டகமும்:

இனி ஈண்டு இப்பாடலில் முதன்மையாகக் கருதத் தகுவது ஒன்றுள்ளது. இவ்வழகிய இனிய பாடல், ஆசிரியர் திருவள்ளுவர் தமது திருக்குறளின்கண் கடவுள் வாழ்த்தாகக் கூறிய பத்துக் குறள்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டு, அவற்றின் தெளிவார்ந்த தீம்பிழிச் சாரமாக, அத்

திருக்குறளினும் மிகச் சுருக்கமும் இலக்கியச் சுவையும் வாய்ந்து திகழ்கின்றதெனலாம்.

(1) திருவள்ளுவர் 'ஆதிபகவன்' எனக் குறித்த தனேயே, திருநாவுக்கரசர் 'அவனுடைய நாமம்' என்கின்றூர்.

(2) திருவள்ளுவர் 'வாலறிவன்' என்றதனைத் திருநாவுக்கரசர் 'மூர்த்தி அவன் இருக்கும் வண்ணம்' என்கின்றூர்.

(3) திருக்குறள் 'மலர் மிசை ஏகினன்' என்பதே, திருநாவுக்கரசரால் 'அவனுடைய ஆரூர்' எனப் பட்டது.

(4) திருக்குறளில் 'இறைவன் பொருள் சேர் புகழ் புரிதல்' எனப் பெற்றது, 'அவனுக்கே பிச்சியானுள்' எனக். குறிப்பிடப் படுவதாயிற்று.

(5—6) 'வேண்டுதல் வேண்டாமை இலாமை' என்பதும், 'பொறிவாயில் ஐந்த வித்தல்' என்பதும், 'அன்னையையும் அத்தனையையும் அன்றே நீத்தல்' ஆக உருவகம் செய்யப் பட்டன.

(7) தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்து மனக்கவலை மாற்றலே, 'அகலிடத்தார் ஆசாரம் அகலுதல்' எனச் சுட்டப் பெறுவதாயிற்று.

(8) பொருளும் புகழும் போகமும் ஆகிய பிறவாழி நீந்தலே, 'தன்னை மறத்தல்' ஆகும்.

(9) எண்குணத்தான் தாளை வணங்கிப் பசுகரணங்கள் சிவகரணங்களாக மாறப் பெறுதலும் பிறவுமே, 'தன்நாமம் கெடுதல்' ஆகும்.

(10) பிறவிப் பெருங்கடல் நீந்தி இறைவன் அடிசேர்தலே 'தலைவன்தாள் தலைப்படுதல்' எனத் திருவள்ளுவரின் அடியொற்றித் திருநாவுக்கரசரால் குறிக்கப் பெற்றுத் திகழ்கின்றது.

முடிவுரை:

திருக்குறள் போன்ற நூல்களை ஆராய்ந்து உணர்தற்கும், திருமுறைகள் பயன்படுதலை இதனல் நன்கு இனிது தெளியலாம். திருவள்ளுவரும் திருநாவுக்கரசரும் தமக்குள் எத்தகைய ஆன்மீக அறிவுத் தொடர்புகள் உடையவர் என்பதும், 'திருக்குறட் கடவுள் வாழ்த்து ஆசிரியர் திருவள்ளுவர் இயற்றியதன்று' என ஒரு சிலர் கூறுவது உண்மையாகாதென்பதும், திருக்குறள் சைவசித்தாந்தம் தழுவிய முழுமுதல் நூலேயாகும் என்பதும் பிறவும், இவ்வாற்ருல் யாவரானும் செவ்விதில் தெளியப்படும்.

[திருமயிலைத் திருவள்ளுவர் கோயிலில் நிகழ்ந்த திருக்குறள் விழாவில், நமது அறநிலைய ஆணையாளர் திரு. M. S. சாரங்கபாணி முதலியார் B.A.B L., அவர்கள் தலைமையில், ஆற்றிய சொற்பொழிவினைத் தழுவியது (6—7—64).

—ஆசிரியர்.]



(வெண்பா)

மக்களுயர் நல்வாழ்வின் மாண்பே இலக்கியமாம்;
தொக்கவையே தூயநல்ல தத்துவமாய்—மிக்கொளிரும்.
நற்சைவ *சித்தாந்தம்* நன்கவற்றுள், மாட்சிமையாற்
பொற்புமிக ஓங்கும், நலம் பூத்து.

—ஆசிரியர்.

# க்ஷேத்திர வெண்பா

**திருமுறைகள் :**

சைவத் திருமுறைகள் பன்னிரண்டு. திருஞானசம்பந்தர் அருளியவை முதல் மூன்று திருமுறைகள். திருநாவுக்கரசர் அருளியவை நான்கு ஐந்து ஆறு திருமுறை கள். சுந்தரர் அருளியது ஏழாம் திருமுறை. மாணிக்க வாசகர் அருளிய திருவாசகம், திருச்சிற்றம்பலக் கோவையார் என்பன எட்டாம் திருமுறை. திருவிசைப்பா, திருப் பல்லாண்டு ஒன்பதாம் திருமுறை. திருமூலர் அருளிய திருமந்திரம், பத்தாம் திருமுறை. திருவாலவாயுடையார் முதலாகப் பலர் பாடிய பாடல்களைக் கொண்டது பதினொன் ரும் திருமுறை. சேக்கிழார் சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய பெரிய புராணம், பன்னிரண்டாம் திருமுறை.

**பதினொன்ரும் திருமுறை :**

இவற்றுள் பதினொன்ரும் திருமுறை, திரு வால வாயுடையார், காரைக்கா லம்மையார், ஐயடிகள் காடவர்கோன், சேரமான் பெரு மாள், நக்கீரதேவர், கல்லாட தேவர், கபில தேவர், பரணதேவர், இளம் பெருமானடிகள், அதிராவடிகள், பட்டினத்தடிகள், நம்பியாண் டார் நம்பிகள் என்னும் பன்னிரண்டு அரு ளாளர்கள் பாடியது; பலவேறு வகையான அமைப்புக்களுடைய 41 பிரபந்தங்களைக் கொண்டது; மொத்தம் 1388 பாடல்கள் இப் பதினொன்ரும் திருமுறையில் நமக்கு இப்போது கிடைத்துள்ளன.

**ஐயடிகள் காடவர்கோன் :**

இப் பதினொன்ரும் திருமுறையில் இருக் கும் பிரபந்தங்கள் பலவற்றுள் ஒன்ருக விளங்குவதே, க்ஷேத்திரத் திருவெண்பா. இதனைப் பாடியருளியவர் ஐயடிகள் காட வர்கோன் என்பவர். இவர் பெரிய புரா ணத்துட் கூறப்பெறும் அறுபான்மும்மை நாயன்மார்களுள் ஒருவர். பல்லவர்கள் என்னும் மன்னர் மரபைச் சேர்ந்தவர்.

வையம் நிகழ் பல்லவர்தம் குலமரபின் வழித்தோன்றிய ஐயடிகள் காடவர்கோன், வெய்ய கலியும் பகையும் மிகை ஒழியும் வகை அடக்கித் தருமநெறி தழைத்தோங்க வும், தாரணிமேற் சைவமுடன் அருமறை யின் துறை விளங்கவும், அரசாட்சி செலுத்தி வந்தார். மன்னர்கள் பலரும் இவர்க்கு அடங்கிப் பணி செய்தார்கள். இவரோ 'வடநூல் தென்தமிழ் முதலாம் பன்னுகலைப் பணிகள்' பல செய்து போந் தருளினர்.

இவர்தம் திருவுள்ளம் சிவபிரான் திரு வடிகளில் இடையருது ஈடுபட்டு நிற்ற லையே பெரிதும் விழைந்தது. அதற்கு அர சாட்சிப் பொறுப்புக்கள் இடையூறும் இன் னலுமாக இருப்ப துணர்ந்த இவர், தமது புதல்வர்க்கு முடிசூட்டி, அவர்பால் அரசாட் சிப் பொறுப்புக்கள் அனைத்தையும் ஒப் படைத்தார். அதன்பின் சிவத்தொண்டு களிலேயே முழுவதும் ஈடுபட முற்பட்டார்.

சிவபெருமான் கோயில்கள் உள்ள க்ஷேத் திரங்களுக் கெல்லாம் சென்ருர்; செவ்விய அன்பொடு பணிந்து, திருப்பணிகள் ஏற் றன செய்தார். அங்ஙனம் தாம் சென்று கண்டு இறைஞ்சித் திருப்பணிகள் செய்த க்ஷேத்திரங்கள் ஒவ்வொன்றையும் குறித்து,

ஒவ்வொரு வெண்பாப் பாடித் தொழுது மகிழ்ந்தார். இங்ஙனம் பன்னெடுங் காலம் சிவப்பணிகள் செய்து கொண்டிருந்து, பின்னர்ச் சிவபிரான் திருவடி நிழலிற் சேர்ந்து இன்புற்றார்.

''அண்டர்பிரான் அமர்ந்தருளும்
ஆலயங்கள் ஆனவெலாம்
கண்டிறைஞ்சித் திருத்தொண்டின்
கடனேற்ற பணிசெய்தே
வண்டமிழின் மொழிவெண்பா
ஒரொன்று வழுத்துவார்''

என இவர்தம் சிவத்தொண்டின் சிறப்பினைச் சேக்கிழார் சுவாமிகள், பெரிய புராணத்தில் இனிதெடுத்துக் கூறியிருத்தல் காணலாம்.

**க்ஷேத்திரத் திருவெண்பா :**

ஐயடிகள் காடவர்கோன் க்ஷேத்திரங்கள் தோறும் சென்று, சிவபிரானைக் கண்டு தொழுது திருத்தொண்டு செய்து பாடியருளிய வெண்பாக்களே, **க்ஷேத்திரத் திருவெண்பா** வாகும். ஐயடிகள் கண்டு இறைஞ்சிப் பணிபுரிந்த தலங்களும், அவற்றில் அங்கங்கே பாடியருளிய வெண்பாக்களும், மிகப்பலவாக இருந்திருத்தல் கூடும். ஆயினும் அந்தோ! நமக்கு இப்போது கிடைத்திருப்பன 24 பாடல்கள் மட்டுமேயாகும்.

ஆயினும், இப்பாடல்கள் ஒவ்வொன்றும் ஒரு விழுமிய முழுமணி (Gem) என விளங்குகின்றது. ஐயடிகள் காடவர் கோனின் அருள்கனிந்த திருவுள்ளத்தின் இயல்பினையும், சிவபத்திச் சிறப்பினையும், இப்பாடல்கள் செவ்விதிற் புலப்படுத்துகின்றன. ஒவ்வொரு பாடலின் கடைசி யடியிலும் ஒரு சிவதலத்தின் பெயர் அழகுற அமைந்துள்ளது. கடைசி யடியாகிய நான்காம் அடிக்கு ஏற்றபடி எதுகை மோனை முதலிய சொல் வகைகளைப் பொருள் நலம் பொலியப் பொருத்தி, மூன்றும் அடி இயற்றப் பட்டிருக்கின்றது.

''இறப்பெனும் மெய்ம்மையை
இம்மை யாவர்க்கும்
மறப்பெனும் அதனின்மேற்
கேடுமற் றுண்டோ?''

எனக் கம்பநாடர் பாடுதற்கு இயைய, 'நமக்கு என்றேனும் ஒருநாள் இறப்புத் துன்பம் வர இருக்கின்றது' என்னும் உண்மையை உள்ளவாறு எண்ணி உணர்ந்து கொள்ளாமையே, மக்கள் பழிபாவங்களைச் செய்து இடர்ப்படுதற்கும், கடவுளுணர்ச்சி இல்லாது மிருக வாழ்க்கை வாழ்வதற்கும் காரணமாகின்றது.

ஆதலின் **க்ஷேத்திரத் திருவெண்பா** ஒவ்வொன்றிலும், முதல் இரண்டு வரிகளில் நம் அனைவருக்கும் நேர இருக்கும் கொடிய இறப்புத் துன்பம் (மரண வேதனை) எத்தகையது எனப் படம்பிடித்துக் காட்டுதல் போல, சொற்சித்திரம் தீட்டிக் காட்டப் பெறுகின்றது. இத்தகைய கவிச்சுவை நலங்கள் பல பொருந்திய க்ஷேத்திரத் திருவெண்பாக்களையும், அவற்றின் பொருளையும் ஈண்டு ஒரு சிறிது காண்போம்!

**தில்லைச் சிற்றம்பலம் :**

(1) நம் வாழ்க்கை எங்ஙனமோ 'நாள் என ஒன்றுபோற் காட்டி' வேகமாக ஓடிக் கொண்டிருக்கின்றது. என்றேனும் ஒரு நாள் அது நின்றுவிடுதல் திண்ணம். அதற்கு முன்பே நம் உற்றார் உறவினர்கள் நம்மிடத்தில் அன்பு குறைந்து மனமாற்றம் கொள்ளுகின்றார்கள். முதுமையும் நம்மை வந்து அடைந்து விடுகின்றது. அதனால் நல்ல நெஞ்சே! நாம் விரும்புகின்ற இந்த நல்ல அச்சு ஆகிய உடம்பானது இறந்து சுடுகாட்டிற்குச் சேர்வதற்கு முன்பே, நீ தில்லைச் சிற்றம்பலம் சேர்ந்து இறைவனைத் தொழுது உய்ய முற்படுக.

ஓடுகின்ற நீர்மை
ஒழிதலுமே, உற்றாரும்
கோடுகின்றார்; மூப்பும்
குறுகிற்று;—நாடுகின்ற

நல்லச்சிற் றம்பலமே
நண்ணுமுன், நன்னெஞ்சே!
தில்லைச்சிற் றம்பலமே சேர்.

[நீர்மை-இயல்பு, தன்மை. கோடுகின்றார்-மனம்மாறி விடுகின்றார். நல்+அச்சு+இற்று+அம்பலமே+நண்ணுமுன். அச்சு-உடம்பு. இற்று—முறிந்து, கெட்டு. அம்பலம்-சுடுகாடு. நண்ணுமுன்—சேர்வதற்கு முன்பே. தில்லைச் சிற்றம்பலம்—சிதம்பரம் என்னும் க்ஷேத்திரம்.]

தென்குடந்தைக் கீழ்க்கோட்டம்:

(2) கடுக்காய்க் கஷாயம் கொண்டுவா! மருந்தோடு சேர்த்துக் கொடுப்பதற்காகப் புளித்த காடி நீரைத் தருக! என்று தலையசைவும் நடுநடுக்கமும் கொண்டு, பேச முடியாமல் நாக்கானது குளறி அடங்கிப் போவதற்கு முன்பாகவே, சாம்பற் புழுதி நிறைந்த சுடுகாட்டினைச் சென்று சேர்வதற்கு முன்பே, பல மாடமாளிகைகளையுடைய தென்குடந்தையிலுள்ள கீழ்க்கோட்டம் என்னும் கோயிலிலுள்ள இறைவன் பெயரை, நெஞ்சே! நீ பலகாலும் சொல்லித் தியானித்துக் கொண்டிரு.

"கடுஅடுத்த நீர்கொடுவா!
காடிதா! என்று
நடுநடுத்து நா அடங்கா
முன்னம்—பொடி அடுத்த
பாழ்க்கோட்டம் சேராமுன்
பன்மாடத் தென்குடந்தைக்
கீழ்க்கோட்டம் செப்பிக் கிட!"

[கடு அடுத்த நீர்-கடுக்காய்க் கஷாயம். காடி-புளித்த தண்ணீர். நடுநடுத்து—ஆட்டங்கண்டு, நடுநடுங்கி. பொடி அடுத்த—சாம்பற் பொடியும் புழுதியும் நிறைந்த. பாழ்க்கோட்டம்—பாழான சுடுகாடு ஆகிய இடம். தென்-அழகிய, தெற்கேயுள்ளே. குடந்தை—கும்பகோணம். குடந்தைக் கீழ்க்கோட்டம்-கும்பகோணத்திலுள்ள ஸ்ரீநாகேசுவர சுவாமி கோயில். செப்பிக்கிட-சொல்லித் தியானித்துக் கொண்டு இரு.)

திருவையாறு:

(3) நெஞ்சமே! நமக்குக் கிழப்பருவம் வந்து, உடல் வளைந்து கூனிப் போய், ஒரு கையிலே கோலை ஊன்றிக்கொண்டு, சிறிது தொலைவும் நடக்கமுடியாது குந்திக் குந்தி மெதுவாக அடியெடுத்து வைத்து, அதற்குள் நோவுகண்டு, இருமலும் இளைப்பும் மேலிட்டு ஏக்கம் கொண்டு, பெருமூச்சு விட்டு, கோழையும் சளியும் ஆறுபோலப் பெருகி, வாய்வழியாக வந்து வெளிப்பட்டு நாம் துன்பப்பட நேர்வதற்கு முன்பே, திருவையாறு என்னும் தலத்தினை நினைந்து அங்குள்ள சிவபெருமானை உன்வாயினால் அழைத்து, உன்னைக் காப்பாற்றி யருளுமாறு வேண்டிக் கொள்!

"குந்தி நடந்து, குனிந்து
ஒருகை கோல்ஊன்றி
நொந்துஇருமி, ஏங்கி
நுரைத்துஏறி,—வந்துஉந்தி
ஐயாறு வாயாறு
பாயாமுன், நெஞ்சமே!
ஐயாறு வாயால் அழை"

[ஐ—கோழை. ஐயாறு—கோழையாகிய வெள்ளம். ஆறு-வழி. வாயாறு-வாய்வழியாக. ஐயாறு-திருவையாறு என்னும் சிவதலம். அழை-கூப்பிடு, வேண்டிக்கொள்.]

திருவாரூர்:

(4) நெஞ்சே! நாம் இப்பொழுது காளையைப் போல இளமையும் எழிலும் மிக்க வடிவுடன் இருக்கின்றோம். இந்நிலைமையும் இளமையும் விரைவில் மாறிப் போய் விடும். துன்பங்கள் வந்து சேரும். பல கொடிய நோய்கள் ஏற்பட்டு நம்மை வருத்தும். நாம் பிழைப்போமா? பிழைக்க மாட்டோமா? என்று ஐயுறவான நிலையில், இடர்ப்படுவோம். இறுதி நாளும் நெருங்கி நமக்குத் தொல்லை கொடுக்கும். இங்ஙனம் எல்லாம் நேர்வதற்கு முன்பே, பாளைகள் விரிந்த அழகிய கமுகஞ்சோலைகளையும் சிறந்த பூஞ்சோலைகளையும் கொண்ட திருவா

ரூரில் உள்ள தியாகராஜப் பெருமானுக்கு அடியவன் ஆகும் பேறுபெற்று, என் முக மானது கவிழ்ந்து அவரை வணங்குவதாக! என் கைகள் குவிந்து அவரைத் தொழுது உய்வதாக!

"காளை வடிவொழிந்து,
கையறவோடு ஐயுறவாய்,
நாளும் அணுகி
நலியாமுன்—பாளை
அவிழ்கமுகம் பூஞ்சோலை
ஆரூரற்கு ஆளாய்க்
கவிழ்க, முகம்; கூம்புக, என் கை !"

[காளைவடிவு-காளை மாட்டைப் போன்ற இளமையும் அழகும் மிக்க உருவம். கையறவு-மிக்க வருத்தம். ஐயுறவு-சந் தேகம், கோழை கட்டுதல். நலியாமுன்-தொல்லை கொடுக்காத முன்பே. அவிழ்+கமுகம். கவிழ்க+முகம். பாளை அவிழ் கமுகம்-பாளைகள் விரிந்த பாக்குமரம். கவிழ்க-குனிந்து வணங்குக. கூம்புக-குவிந்து தொழுக.]

திருத்துருத்தி :

(5) நெஞ்சமே! வஞ்சிக் கொடியைப் போன்ற நுண்ணிய இடையை யுடைய பெண்கள், வாள் போன்ற பெரிய தம் முடைய கண்களிலே இருந்து நீரைச் சொரியவும், நின்னுடைய தலையைத் தம்மு டைய துடையின்மேல் சார்த்தி வைத்துக் கொண்டு, இவருக்குக் குடிப்பாட்டுவதற் காக யாரேனும் ஒருத்தி போய்க் கஞ்சி கொண்டு வாருங்கள்! என்று சொல்லவும் நேராத முன்பே, திருத்துருத்தி என்னும் தலத்திலுள்ள சிவபிரானின் திருவடிகளை அடைந்து, உய்வாயாக!

"வஞ்சியன நுண்ணிடையார்
வாள்தடங்கண் நீர்சோரக்
குஞ்சி குறங்கின்மேற்
கொண்டிருந்து—கஞ்சி
அருத்தொருத்தி கொண்டுவா!
என்னுமுன், நெஞ்சே
திருத்துருத்தி யான்பாதம் சேர்."

[வஞ்சிஅன-வஞ்சிக் கொடியைப் போன்ற. குஞ்சி-தலைமயிர், தலை. குறங்கு-துடை. அருத்த+ஒருத்தி-அருத்தொருத்தி. அருத்த-குடிக்கச் செய்ய. திருத்துருத்தி சோழ நாட்டில் உள்ள குத்தாலம் என்னும் தலம். 'திருத்துருத்தி மேயானைத் தித்திக் கும் சிவபதத்தை' என்பது திருவாசகம்.]

திருக்கோடிகா :

(6) நெஞ்சமே! உன்னுடைய கால்களை ஆடையின் நூலால் கட்டிவைத்து, நின் தலைக்கு மாலை அணிவித்து, கண்களுக்கு மை தீட்டி, நின் மேலே ஒரு பெரிய புதிய ஆடையைக் கொண்டு மூடச் செய்து, நீ பிணமாயினதைக் கண்டு பலரும் தம் முடைய கைகளைக் கொண்டு மார்பில் ஒலி யெழுமாறு அடித்துக்கொண்டு, அழுது வருந்தும் நிலை ஏற்படுவதற்கு முன்பே, நீ திருக்கோடிகா என்னும் தலத்தைச் சென்று அடைந்து, அங்குள்ள இறை வனைத் தொழுது வணங்கு.

"காலைக் கலையிழையாற்
கட்டித்தாம் கையார்த்து
மாலை தலைக்கணிந்து
மைஎழுதி—மேலோர்
பருக்கோடி மூடிப்
பலர்அழா முன்னம்
திருக்கோடிகா அடைநீ சென்று"

[கலை இழை-ஆடை நூல். மேலோர்-மேலே ஒரு. பருமை+கோடி-பருக்கோடி. கோடி-புதிய ஆடை. திருக்கோடிகா என் பது ஒரு சோழ நாட்டுத் தலம். 'கோடி காவனைக் கூறுத நாளெலாம் பாடிகாவலிற் பட்டுக் கழியுமே' என்பது அப்பர் தேவாரம்.]

திருவிடைவாய் :

(7) அறியாமையையுடைய நெஞ்சே! உனது வாயானது திறந்துகொண்டு, நீ மரணம் அடைவதற்கு முன்னரே, மிகவும்

விரைவுற்றுக் காலம் இருக்கும்போதே, நின்னுடைய நன்மையை விரும்பி, பாண்டவாய் நதியின் தென்கரையிலுள்ள அழகிய திருவிடைவாய் என்னும் தலத்திலுள்ள சிவபெருமானின் திருநாமத்தினை, நின்னுடைய வாயிலே அமைத்து வைத்துக்கொண்டு, இடைவிடாது வழுத்தித் தியானம் செய்து உய்யத் தலைப்படுவாயாக!

"மாண்டு,வாய் அங்காவா
முன்னம், மடநெஞ்சே
வேண்டுவாய் ஆகி,
விரைந்தொல்லைப்—பாண்ட
வாய்த்
தென்விடைவாய் மேய
சிவனார் திருநாமம்
நின்னிடைவாய் வைத்து நினை"

[அங்காத்தல் - திறந்து கொள்ளுதல். ஒல்லை விரைவில். பாண்டவாய்-மண்ணியாற்றினின்று பிரியும் ஒரு கிளை ஆறு. விடைவாய்- திருவிடைவாசல் என்னும் தலம். சம்பந்தர் இத்தலத்திற் பாடிய பதிகம் புதிதாகக் கல்வெட்டினின்று 1917ஆம் ஆண்டிற் கண்டுபிடிக்கப் பெற்றுளது.]

திருநெடுங்களம் :

(8) ஏழை மடநெஞ்சே! தொட்டுத் தடவிப் பார்த்து, நாடித்துடிப்புச் சிறிதும் காணாமையினாலே, முன்னிருந்த பெயரை விடுத்தொழித்துப் பிணம் என்று விரும்பிப் பேர் வைத்து, 'பாடை கட்டிச் சீக்கிரம் எடுத்துச் செல்லுங்கள் ஐயா!' என்று மற்றவர்கள் சொல்ல நேர்வதற்கு முன்னமே, திருநெடுங்களம் என்னும் க்ஷேத்திரத்தில் உள்ள சிவபெருமானின் திருவடிகளை நினைத்து வணங்குவாயாக!

"தொட்டுத் தடவித்
துடிப்பொன்றும் காணாது
பெட்டுப் பிணமென்று
பேரிட்டுக்—கட்டி
எடுங்களத்தா என்னுமுன்
ஏழைமட நெஞ்சே!
நெடுங்களத்தான் பாதம் நினை."

[துடிப்பு-நாடிகளின் துடிப்பு. பெட்டு-விரும்பி. அத்தா-ஐயா. திருநெடுங்களம் என்னும் தலம் காவிரியின் தென்கரையில் உள்ளது. 'திருநட்டாங்குளம்' என இப்போது வழங்குகின்றது. 'இடர்களையாய் நெடுங்களம் மேயவனே' எனச் சம்பந்தர் தமது திருப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும் இத்தலத்திற் குறிப்பிட்டிருக்கின்றார் ]

திருக்குழித் தண்டலை :

(9) நெஞ்சமே! நம்முடைய உடம்பானது ஒரு சிறு குடிசையைப் போன்றது, அழுகியொழியும் தன்மையது, மாற்றமுறும் இயல்பினது. இத்தகைய இவ்வுடம்பை விட்டு, உயிர் எப்போதும் நீங்கிவிடும் என்று அறிந்து கூறுதல் இயலாது. ஆதலின், கழுகுகள் நம்முடைய பிணத்தினைக் கொத்தி எலும்புகளைக் கழித்து ஊனை யுண்டு நம்மைத் தொல்லைப்படுத்தாத முன்னரே, காவிரியாற்றின் தென்கரையில் உள்ள திருக்குழித் தண்டலை என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானைத் துதித்து வழிபடுவாயாக!

"அழுகு திரிகுரம்பை
ஆங்கதுவிட்டு, ஆவி
ஒழுகும் பொழுதறிய
ஒண்ணா—கழுகு
கழித்துண் டலையாமுன்
காவிரியின் தென்பால்
குழித்தண் டலையானைக் கூறு."

[குரம்பை-குடிசை, உடல். ஒழுகும்-நீங்குகின்ற. ஒண்ணா-முடியாது. கழித்து+உண்டு+அலையாமுன். அலைத்தல் - வருத்துதல். குழித்தண்டலை-சோழ நாட்டிலுள்ள கடம்பர் கோயில் என்னும் தலம். இப்போது 'குளித்தலை' என வழங்கி வருகின்றது ]

திருமயிலை :

(10) குயிலைப் போன்று கறுத்த தலைமயிரானது, கொக்கைப் போன்று வெண்மை நிறம் உடையதாய் நரைத்து,

முதுமைப் பருவம் மேலூர்தலினால் இருமல் நோயானது பற்றிக் கொள்ளத் தொடங்கு வதற்கு முன்னரே, நெஞ்சமே! நீ மயிலாப் பூரில் உள்ள அழகிய கடற்கரையின் புன்னை மரச் சோலையில் எழுந்தருளியுள்ள ஸ்ரீகபா லீச்சுரப் பெருமானைச் சிந்தித்து வணங்கிக் கொள். இல்லையேல், நீ பிறகு வாய் திறந்து வருந்தி இளைத்துத் துன்புற்றிருக்க நேரிடும்.

"மயிலொத் திருள்குஞ்சி
கொக்கொத் திருமல்
பயிலப் புகாமுன்னம்
நெஞ்சே—மயிலைத்
திருப்புன்னை யங்கானல்
சிந்தியாய் ஆகில்,
இருப்பின்னை அங்காந் திளைத்து."

[மயிலை-சென்னைத் திருமயிலாப்பூர். அம்பிகை மயில் வடிவம் கொண்டு பூசித்த தலமாதலின், மயிலாப்பூர் எனவும், மயிலை எனவும் பெயர் பெற்றது. இத்தலம் கடற் கரைக்கு அருகில் இருத்தலானும், இதன் தலவிருட்சம் புன்னை மரம் ஆதலானும் 'மயிலைத் திருப்புன்னையங் கானல்' எனச் சிறப்பித்து ஓதப்பெற்றது. கடற்கரையும், அங்குள்ள சோலையும் 'கானல்' என வழங் கப்படும். சிந்தித்தல்-தியானித்தல். இரு+ பின்னை+அங்காந்து+இளைத்து. 'இரு+ பின்னை' எனற்பாலது 'இருப்பின்னை' என எதுகை நோக்கி வந்தது. அங்காத்தல்-வாய்திறத்தல்.]

(தொடரும்)



ஆசிரியர் மெய்கண்டார்

# சென்னை மாவட்டக் கோயில் வரலாறு

நமது அறநிலைய ஆட்சித் துறையின் சார்பில், சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தின் மூலம், தமிழ்ப் பெரும் புலவர்-கணிவர்-டாக்டர் திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை அவர்களால் எழுதப்பட்ட இந்நூலின் வெளியீட்டு விழா, 26-7-64 ஞாயிறன்று காலை 10 மணியளவில், சென்னை மாநில கவர்னர் மாட்சிமை தங்கிய ஸ்ரீ ஜெயசாமராஜவாடியார் அவர்களின் சீரிய தலைமையில் மிகவும் சிறப்புற நடைபெற்றது,

இறை வணக்கத்திற்குப் பின்னர், நமது அறநிலைய ஆணையாளர் திரு. மிகு. M. S. சாரங்கபாணி முதலியார், B. A. B. L., அவர்கள், "நாளுக்குநாள் பெருகிவரும் திருக்கோயில் யாத்திரீகர்கள், வழிபாட்டாளர்கள், கலையார்வலர்கள் ஆகிய பொதுமக்களுக்குப் பல வசதிகள் செய்து தரும் நம் அறநிலைய ஆட்சித்துறையின் பணிகளில் ஒன்றாக, இத்தகைய மாவட்டக் கோயில் வரலாறுகள் வெளியிடப் பெறுகின்றன. முன்னரே நெல்லைமாவட்டக் கோயில் வரலாறு வெளிவந்துள்ளது. அடுத்துத் தஞ்சை மாவட்டக் கோயில் வரலாறும் வெளிவரும். இந்நூல்களை எழுதிவரும் திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் மிகவும் முயற்சியும் உழைப்பும் எடுத்துக் கொண்டு, எல்லாக் கோயில்களுக்கும் தாமே நேரிற் சென்று கண்டும், சம்பந்தப்பட்ட எல்லா நூல்களையும் ஒன்று விடாது ஆராய்ந்தும், எல்லாத் தகவல்களையும் தக்கவரிடம் கேட்டறிந்து தொகுத்தும், இந்நூலினை மிகவும் சிறந்த முறையில் எழுதி உதவியிருக்கின்றார். அவரை மிகவும் பாராட்டுவதுடன், இந்நூலை நாம் அனைவரும் படித்துப் பயனடைவோமாக" எனக் கூறி வரவேற்புரை நிகழ்த்தினார்கள்.

தலைமை தாங்கிய மன்னர் பிரான் அவர்கள், "தென்னிந்தியா கோயில்கள் நிறைந்து விளங்குவது. அவற்றிற் பெரும்பாலான கோயில்களுக்குச் சென்று தரிசித்து வழிபட்டு மகிழும் பாக்கியத்தினை யான் பெற்றிருக்கிறேன். "திருக்கோயில் இல்லாத ஊர், திரு இல்லாத ஊர். அவையெல்லாம் ஊர் அல்ல, அடவி காடே" (அப்பர்.) கோயில்கள் நம் தேசத்தின் ஆன்மீகத் துறை முயற்சியின் வரலாற்றைப் புலப்படுத்துகின்றன. நம்முடைய முன்னோர்களின் கட்டிடக் கலைத் திறனுக்கு அழியாத சிறந்த அடையாளங்களாகத் திகழ்கின்றன. நம் இந்திய தேசத்தின் சிறந்துயர்ந்த கலைப் பண்பாட்டுச் செல்வங்களையெல்லாம் தமிழகம் போற்றிக் காத்துவருகின்றது. இதற்காகச் சென்னை மாநில அரசின் அறநிலைய ஆட்சித் துறை ஆற்றி வரும் அரும் பெருந் தொண்டுகள் பெரிதும் பாராட்டற்பாலன. இந் நூலானது ஆராய்ச்சியாளர்களுக்குப் பெரிதும் பயன்படும் என்றும், பின்வரும் சந்ததியினர்க்கு உணர்ச்சி யூட்டு மென்றும் நம்புகின்றேன்" என்று குறிப்பிட்டருளினார்கள்.

நூலை வெளியிட்ட நம் தமிழக முதலமைச்சர் திருமிகு எம். பக்தவத்சலம் B.A.B.L. அவர்கள், 'நம் கவர்னர் அவர்கள் கோயில் வழிபாடுகளில் மிகவும் ஈடுபாடு கொண்டவர், சைவ சித்தாந்த தத்துவக் கொள்கையினைத் தமிழில் உள்ள மூல நூல்களைக் கொண்டே, கற்று அறிந்து கொள்ள வேண்டு மென்ற ஆர்வம் மிக்கவர். அவர்கள் இவ்விழாவிற்குத் தலைமை தாங்குவது மிகவும் சிறப்பும் பொருத்தமும் ஆகும். நாம் நம்முடைய தேசத்தின் வரலாற்றையும், கோயில்களின் வரலாற்றையும் உள்ளவாறு அறிந்து கொள்ளுதல் மிகவும் நலம் பயக்கும். இந்நாளில் மாணவர்கள் சரித்திர பாடத்தில் போதிய ஆர்வம் காட்டுவதாகத் தெரியவில்லை. வரலாற்றுப் பாடம் (Humanities) 'மனித இயல் பாடங்களுள்' ஒன்றாக விளங்குகிறது. அதில் நாம் ஆர்வம் காட்டுவது மிகவும் இன்றியமையாதது. அதற்காகவே நம் தேசத்தின் உண்மை வரலாற்றை ஆராய்ந்து வெளியிட அரசாங்கம் முயற்சி எடுத்துக் கொண்டுள்ளது. கோயில்களில் உள்ள கல்வெட்டுக்கள் இத்துறையில் நமக்குப் பெரிதும் துணை புரிகின்றன. ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட உத்தரமேரூர்க் கல்வெட்டானது, நம் நாட்டில் எத்தகைய மக்களாட்சி இனிது நடைபெற்று வந்தது என்பதை விளக்குகிறது.

இந்நூலினால் நாம் திருமயிலை, திருவல்லிக்கேணி முதலிய எத்தனையோ பல கோயில்களின் வரலாறுகளை அறிந்து கொண்டு மிகவும் மகிழ்கின்றோம். இத்தகைய சிறந்த நூல்களை நாம் அனைவரும் படித்துப் பயன்பெறுவோமாக" எனக் கூறி நூலை வெளியிட்டார்.

சட்டசபைத் தலைவர் திரு எஸ். செல்லபாண்டியன், நீதிபதி திரு எம். அனந்தநாராயணன், திரு. எஸ். சச்சிதானந்தம் பிள்ளை ஆகிய பெருமக்கள் நூலையும், நூலாசிரியரையும் குறித்துப் பாராட்டுரை வழங்கினார்கள்.

துணை ஆணையர் திரு. D. இராமலிங்க ரெட்டியார் M.A.B.L. அவர்கள், நன்றியுரை நவின்றார்கள். தேசீய கீதத்துடன் விழா இனிது நிறைவேறியது.

—ஆசிரியர்.

# திருபுவனை வரதராசப் பெருமாள் கோயில் கல்வெட்டுச் செய்திகள்

திரு. வை. சுந்தரேச வாண்டையார்

## ஊரின் பழம் பெயர்

திரிபுவன மாதேவிச் சதுர்ப்பேதி மங்கலம் என்பதே திருபுவனையின் பழம் பெயராகும். இது புதுச்சேரிக்கு அருகிலுள்ளது. சதுர்ப்பேதி மங்கலம் எனினும் சதுர்வேதி மங்கலம் எனினும் ஒக்கும். சதுர்வேதி மங்கலம் என்பது சில சிற்றூர்களைத் தன்னகத்துக் கொண்டது. தனி ஊரும் சதுர்வேதி மங்கலம் என்று வழங்கப் பெறுவதுண்டு. அம்முறையில் திரிபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலம் ஒரு தனி ஊராகும். இச் செய்தி "பெரும்புகழ்க் கோவிராஜகேசரி வன்மரான உடையார் இராஜாதி ராஜ தேவற்கு யாண்டு முப்பதாவது ராஜேந்திர சோழவளநாட்டுத் தனியூர் திரிபுவன மாதேவிச் சதுர்ப்பேதி மங்கலத்துப் பெருங்குடிப் பெருமக்களோம்"—என்னும் வரதராசப் பெருமாள் கோயில் கல்வெட்டுப் பகுதியால் அறியக் கிடக்கின்றது. சதுர்ப்பேதி மங்கலம்—என்பது சருப்பேதி மங்கலம் என்றும் கல்வெட்டுக்களில் வெட்டப்பெற்றிருப்பது உண்டு.

## கோயிலின் பழம் பெயர்

இக்காலம், வரதராசப் பெருமாள்கோயில் என்று வழங்கப் பெறும். கோயிலின் பழம் பெயர் வீரநாராயண விண்ணகர் என்பதாகும். இவ்விண்ணகரத்தில் எழுந்தருளியிருக்கும் திருமாலின் பழம் பெயர் **வீர நாராயண விண்ணகர ஆள்வார்**. இச் செய்திகள் "பெருங்குடிப் பெருமக்களோம். இவ்வாட்டை மீன நாயிற்றுப் புதன்கிழமை பெற்ற உத்திரத்து நாள் செம்பியன் உம்பள நாட்டு மூவேந்த வேளான் எடுப்பித்த மண்டபத்தே நிரம்பப் பெருங்குறி கூடியிருந்து பணிப்பணியால் பணித்தன எழுத்து. நம் மூலதெய்வம் நடுவில் **ஸ்ரீ வீர நாராயண விண்ணகர ஆழ்வார்** திருநாமத்தால் சேநாபதிகள் இராஜேந்திர சோழ மாவலி வாணராஜா......" என்னும் இக் கோயில் கல்வெட்டுப் பகுதியால் அறியக் கிடக்கின்றன.

## கோயிலில் உள்ள கல்வெட்டுக்கள்

இக் கோயிலில் சோழ மன்னர்களில், முதலாம் இராசராச சோழன், முதலாம் இராசேந்திர சோழன், முதலாம் இராசாதிராசன், இரண்டாம் இராசேந்திர தேவன், முதலாம் குலோத்துங்க சோழன், விக்கிரம சோழன் இவர்கள் காலங்களிலும்; பல்லவ மன்னரில் சகலபுவனச் சக்கரவர்த்தி காடவன் அவனி ஆளப் பிறந்தான் கோப் பெருஞ்சிங்கன் காலத்திலும், விசய நகர வேந்தரில் விருப்பண்ண உடையார் காலத்திலும் செதுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன. குறிப்பு—அரசியலார் படியெடுத்துச் சென்ற கல்வெட்டுக்களில் பல கல்வெட்டுக்கள் இதுபொழுது காணக் கிடைத்தில.

இக் கோயிலில் எழுந்தருளுவிக்கப்பட்ட வேறு திருமேனிகள்:—

## 1. கோலவராக ஆள்வார்

இவர் வீர நாராயண விண்ணகர் ஆள்வார் கோயிலில் தனிப்பட எழுந்தருளுவிக்

கப் பட்டவர். இவரைப் பற்றி முதற் குலோத்துங்க சோழனின் ஆறும் ஆட்சி யாண்டில் அதாவது கி. பி. 1076இல் குறிப்பிடப்பட்டுள்ளது.

## 2. வீற்றிருந்த பெருமாள்

இவர் வீரநாராயண விண்ணகர் ஆள்வார் கோயிலில் தனியே எழுந்தருளியிருப்பவர். இவர், விசயநகர வேந்தராகிய விருப்பண்ண உடையார் காலத்தில் சகம் 1314 அதாவது கி. பி. 1392இல் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டில் குறிக்கப் பெற்றுள்ளனர். இவர் முதற் குலோத்துங்க சோழனது 9ஆம் ஆட்சியாண்டில் அதாவது கி. பி. 1079 இலும் கூறப்பெற்றுள்ளனர். இவர் இம் மன்னன் கல்வெட்டில் வீற்றிருந்த ஆள்வார் என்று பெயர் பெற்றிருக்கின்றனர்.

## அவ்வூரிலுள்ள வேறு கோயில்கள்

### 1. அருளாகர ஈஸ்வரமுடையார்

இந்த அருளாகர ஈஸ்வரம் உடையார் கோயிலைக் கட்டுவித்து அதில் அருளாகர ஈஸ்வரமுடையாரை எழுந்தருளுவித்தவர், சயங்கொண்ட சோழ மண்டலத்து, மணவில் கோட்டத்து, மணவில் என்ற ஊரில் இருந்த அரும்பாக்கிழான் மதுராந்தகன் பொன்னம்பலக் கூத்தன் ஆன பொற்கோயில் தொண்டைமானர் ஆவர். இவரை எழுந்தருளுவித்த காலம் விக்கிரம சோழ தேவரின் ஐந்தாம் ஆட்சியாண்டு. அதாவது (1118+5)=கி. பி. 1123 ஆகும். இப் பொற்கோயில் தொண்டைமானர், விக்கிரம சோழதேவருடைய நலத்துக்கும் ஊராரின் நலத்துக்குமாக இக்கோயிலைக் கட்டுவித்துள்ளார்.

### 2. வீரசோழ விண்ணகர ஆள்வார் கோயில்

திரிபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலத்துச் சபையார் வீரநாராயண விண்ணகர் ஆள்வார் கோயிலில் கூடி, வீரசோழ விண்ணகர ஆள்வார் கோயிலுக்கு நிலம் அளித்த செய்தியை, 'திருமகள் மருவிய' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய பரகேசரி இராசேந்திர சோழனின் (இரண்டாம் இராசேந்திரனின்) ஏழாம் ஆட்சி யாண்டில் அதாவது (1052+7)=கி. பி. 1059இல் பொறிக்கப்பட்ட கல்வெட்டு உணர்த்துகின்றது. எனவே இவ்வூரில் வீரசோழ விண்ணகர ஆள்வார் கோயில் ஒன்று உண்டென்பது பெறப்படுகின்றது.

### 3. தென்திருவேங்கடத் தெம்பெருமான் கோயில்

இத் தென்திருவேங்கடத் தெம்பெருமான் கோயிலுக்கு முன்னரே விடப்பட்டிருந்த நிலம் வழிபாட்டுச் செலவிற்குப் போதாமையால், முதற் குலோத்துங்க சோழனின் 49ஆம் ஆட்சியாண்டில் அதாவது கி. பி. 1119இல், மீளவும் நிலம் அளிக்கப்பட்ட செய்தியை, அம்மன்னனது கல்வெட்டு குறிப்பிடுகின்றது. ஆதலால் இப்பெயருள்ள கோயிலும் இவ்வூரில் உள்ளது.

### 4. திரு நாகேஸ்வரமுடையார் கோயில்.

இக் கோயிலில் எழுந்தளியிருக்கும் 'திரு நாகேஸ்வரமுடைய பரமசுவாமிக்கு' திருவிழா நடத்துவதற்கு நிலம் அளிக்கப்பட்ட செய்தியை முதற் குலோத்துங்க சோழனுடைய ஐந்தாம் ஆட்சியாண்டு அதாவது கி. பி. 1075இல் வெட்டப்பட்ட கல்வெட்டு உணர்த்துவதால், இப் பெயருடைய கோயிலும் இவ்வூரில் உண்டு என்று புலப்படுகின்றது.

### 5. திருமேற் கோயில் ஆள்வார்

இவ்வாள்வார் கோயில், ஊரின் மேற்கில் உள்ளது. இவர்க்கு அமாவாசை, விஷுக்கள், இந்நாட்களில் விசேட வழிபாட்டிற்குத் திரிபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலத்தார் நிலநிவந்தத்தை முதற் குலோத்துங்க சோழன் காலத்தில் அளித்திருந்தனர். (தொடரும்)

# ஸ்ரீ வைஷ்ணவ குருபரம்பரை

திரு. K. பட்சிராஜன், B.A., B.L., திருநெல்வேலி

(முன் இதழ்த் தொடர்ச்சி)

கூடையோடு வரும் அம்மையாரைக் கண்ட அந்த ஒட்டச் சிறுவன் ஓடோடியும் வந்து ஏன் அம்மணீ! இவ்வளவு தாமதம் என்று கூறிக்கொண்டே கூடையை வாங்கக் கை நீட்டலும் மறைவிலிருந்த அனந்தாழ்வான் வெளிப்பட்டு ''யார் நீ. எங்கள் செல்வத்தைக் கொள்ளையிட வந்தவன்!'' என்று கொட்டை ஓங்கிக் கொண்டு வரக்கண்ட சிறுவன் ஓட ஆரம்பித்தான். அனந்தாழ்வான் அவனைத் துரத்திக் கொண்டு பின்னே ஓடினார். இப்படி அவன் ஓட இவர் ஓடக் கடைசியில் அனந்தாழ்வான் அலுப்புற்று ஓய்ந்து நிற்க சிறுவன் திரும்பி நோக்கி அவரைப் பார்த்துச் சிரித்து நின்றான். நின்றவனைப் பிடிக்க அநந்தாழ்வான் விரைதலும் ஒட்டன் உருவம் மறைந்தது. எம்பெருமான் அநந்தாழ்வான் முன் சேவை சாதித்தான். ஆழ்வானும் திகிலும் வியப்பும் மேலிட்டுப் பெருமான் திருவடிகளிலே விழுந்து, தம் அபராதத்தைப் பொறுத்தருளுமாறு பிரார்த்தித்தார். இறைவனும் தன் சோதி வாய் திறந்து 'ஆழ்வானே! நாம் உமக்கென்ன தீங்கிழைத்தோம். நம்மை இப்படிக் கொட்டும் கையுமாகத் துரத்தினீரே!'' என்று முறுவலோடு வினவ, ஆழ்வானும் 'அடியேனுடைய ஆசார்யன் எங்களுக்கருளிய கைங்கர்ய ஸ்ரீயை தேவரீர் அபகரிக்க முற்படலாமோ?'' என்று பதில் வினவினார். ஸ்ரீநிவாஸன் 'நன்று நன்று ஆழ்வாரே! நம்முடைய பதியில் வந்தேறியான நீர் நம்மையே துரத்தி மேலும் பேசுகிறீரே!'' என்ன, ஆழ்வான் ''ஸ்வாமீ! க்ஷமிக்க வேணும். தேவரீர் உம்முடைய நிரந்தர வாசஸ்தலமான பரம பதத்தை விட்டு பக்தஜன பரிபாலனத்துக்காக இந்தப் பதிக்கு எழுந்தருளினீர். அடியேன் ஆசார்யனுடைய கட்டளைப்படி கைங்கர்யத்தை மேலிட்டுக்கொண்டு இங்கே வந்திருக்கிறேன். இப்படி நாமிருவரும் வந்தேறிகள் தானே ஸ்வாமீ! என்று விண்ணப்பித்தார். வேங்கடவனும் 'நம்மை உன்னியன்றோ உமதாசார்யன் இக்கைங்கர்யத்தை உமக்கு அருளியது' என்று கேட்டான். ஆழ்வானும் ''உண்மைதான் ஸ்வாமீ! எனினும் உடையான் தன் நிலையை விட்டு அடியான் கைங்கர்யத்தில் உள் நுழைந்து பரிமாறுவது முறையாகுமா?'' என்று விண்ணப்பிக்க. இத்தனையும் மந்தகாசத்துடன் கேட்டிருந்த வேங்கடவாணன் மிக மகிழ்வெய்தி 'நன்று நன்று ஆழ்வானே. உம்முடைய ஆசார்யாபிமானம் மிகவும் போற்றத்தக்கதே' என்று கூறி அவரைக் குளிரக் கடாக்ஷித்து மறைந்தருளினான்.

பின்னர் அனந்தாழ்வான் நிலங்களை நன்றாகத் திருத்தித் திருநந்தவனம் அமைத்து அதற்கு இராமானுசன் என்று திருநாமமிட்டுப் பலவித வண்ணப் பூச்செடிகள் வைத்துத் திருவேங்கடமுடையான் திருவுள்ளம் உவக்குமாறு புஷ்ப கைங்கர்யம் செய்துகொண்டிருந்தார். இந்த வைபவத்தை எம்பெருமானார் கேட்டருளித் தாமும் திருமலைக் கெழுந்தருள வேண்டு

மென்று மிகவும் ஆசையுடையரானார். அதனால் திருவாய்மொழி வியாக்கியானத்தை மிகத் தீவிரமாக நடத்திச் சாத்து முறையும் நடப்பித்தார். பின் ஒருநாள் நம் பெருமானை சேவித்து "ஸ்வாமி! அடியேன் திருவேங்கட முடையானைத் திருவடி தொழுது மீள அவாவுடையவனாயிருக்கிறேன். தேவரீர் நியமனம் செய்தருள வேண்டும்" என்று பிரார்த்திக்கப் பெருமாளும் அர்ச்சகமுகமாக நியமனம் அளித்து அவரை வழி அனுப்பிவைத்தார். உடையவரும் பயணகதியாய் வழியில் திருக்கோவலூர் சென்று பெருமானையும் முதலாழ்வார்களையும் சேவித்துக் காஞ்சீபுரம் சென்றார். முதலில் பெருமாளுக்கு மிகவும் அந்தரங்கரான காஞ்சிபூர்ணர் என்ற திருக்கச்சிநம்பிகளைச் சேவித்து அவர் புருஷகாரமாக அவருடனே கோயிலுக் கெழுந்தருளினார். அங்கே முன்பு வாசம் செய்தவரானபடியாலே ஒவ்வொரு இடத்தையும் அடைவே சேவித்துப் பின்னர், பேரருளாளனையும் பெருந்தேவியாரையும் திருவடிதொழுது தீர்த்த ப்ரஸாதங்கள் அருளப் பெற்றார். பின்னர் சுதர்சனாழ்வானையும் பெரிய திருவடியையும் வணங்கி நம்பி முன்னுகை வையமாளிகையிலே ஏறி அத்தியூரானைச் சேவித்துத் திருப்பல்லாண்டையும், ஸ்ரீவரதராஜாஷ்டகத்தையும் அநுஸந்தித்து அங்கும் அத்தியூரானால் தீர்த்தப்ரஸாதங்கள் ஸாதிக்கப்பெற்றுத் திருமலை நோக்கிப் பயணமானார்.

முன்பு திருமலை சென்றவரல்லவாதலாலே உடையவர் வழிதவறித் திகைத்தார். அங்கே ஒரு புறவிலே ஒருவன் ஏற்றமிறைத்துக் கொண்டிருப்பதைக் கண்ட உடையவர் நேரே அவன்பால் சென்று அப்பா திருமலைக்குப் போகும் வழி எது?" என்று வினவினார். அவன் செவ்வையான நல்வழியைக் காட்டி அதற்குரிய அடையாளங்களையும் அவருக்கு விளக்கினான். எம்பெருமானார் அவன் இவ்வளவு பரிவோடு தமக்குச் செல்வழி அறிவித்தமை கண்டு குதூகலமுடையவராய் 'இது ஒரு அமானவன் புருஷகார மிருந்தபடி என்னே!" என வியந்து அவ்வேற்றமிறைப்பவனைத் தெண்டனிட்டார். கூடச் சென்ற முதலிகளும் இந்தப் பரமாஸ்திகத்வத்தைக் கண்டு களித்துத் தாங்களும் அவனைத் தெண்டனிட்டனர்.

பின்னர் அவனிடம் விடைபெற்று அவன் காட்டிய வழி சென்று திருமலையின் மொய்ப்பூந்தடம் தாழ்வரை சேர்ந்தார் எம்பெருமானார். அங்கே எழுந்தருளியுள்ள ஆழ்வார்கள் பதின்மரையும் சேவித்து அங்கேயே சில நாள் தங்கி அங்கே ஊராளியாயிருந்த விட்டல தேவராயனைத் தமக்குச் சீடனாக்கிக் கொண்டார். அவ்வூரிலே தம் சிஷ்யர்களில் முப்பது பேரைக் குடியேற்றி வைத்து இளமண்டியம் என்னும் கிராமத்தை அவர்களுக்குக் கைப்பற்றுசாகப் பெற்றுக் கொடுத்து அங்கே எழுந்தருளியிருந்தார்.

முன்னைய இதழிலே உடையவர் திருவேங்கட யாத்திரையாய் அடிவாரம் வந்த வரலாற்றைப் பார்த்தோம். உடையவர் இங்ஙனம் திருவரங்கத்தினின்றும் வரும் வழியில் நிகழ்ந்த உள்ளமுருக்கும் சம்பவம் ஒன்று ராமாநுஜார்ய திவ்ய சரிதையில் காண்கிறது. அது வருமாறு :—

திருக்கோவலூரிலே எம்பெருமானையும் தமிழ்த் தவர்களான முதலாழ்வார்களையும் சேவித்த உடையவர் அன்று அங்கேயே தங்கினார். மறு நாள் புறப்படுவதாகத் தீர்மானித்து முன்னைய இரவே எண்ணாயிரத்து எச்சான் என்பவருக்குச் சில ஸ்ரீவைஷ்ணவர்களைத் தம் வருகையை அறிவித்து வர அனுப்பியிருந்தார். அவர்கள் மூலம் உடையவர் வருகையை உவப்போடு ஏற்ற எச்சான், நல்ல செல்வவந்தனானமையின், வீதிகளெங்கும் காவணங்கள் அமைக்கவும், தோரணங்கள் நாட்டவும் ஏற்பாடு செய்து, உடையவரை வெகு

விமரிசையாக வரவேற்பதில் முனைந்தாரே ஒழிய வந்த ஸ்ரீவைஷ்ணவர்களைக் கவனிக் கவே இல்லை. அவர்கள் உடையவரிடம் திரும்ப வந்து நடந்தவற்றையெல்லாம் உடையவரிடம் விண்ணப்பித்தனர். உடை யவரும் ஒன்றும் கூறுமல் அவர்கள் சொன்னவற்றைத் தம் உள்ளத்திலேயே இருத்திக் கொண்டார்.

மறுநாள் காலை அனைவரும் திருக் கோவலூரை விட்டுப் புறப்பட்டனர். ஊரெல்லை கடந்து சிறிது வழி செல்லவும் பாதை இரு கவராகப் பிரிந்தது. அங்கே வந்த சிலரை அழைத்து உடையவர் அவ் வழிகள் எவ்விடம் செல்கின்றன? என்று வினவினர். அவர்கள் உடையவர் உள்ள மறிந்தார்போன்று ஒரு வழியைக் காட்டி 'இது ராஜஸமாயிருப்பார் போய்ப்புகும் எச்சான் இருப்பிடத்துக்குப் போகும் வழி'' என்றும் மற்றதைச் சுட்டி "அது ஸாத் விகராயிருப்பார் போய்ப்புகும் பருத்திக் கொல்லை 'அம்மாள்' (ஒரு பட்டப் பெயர். பெண்பாற் பெயரன்று) இருப்பிடம் போகும் வழி'' என்றும் கூறினர். உடையவரும் பின்னைய வழியே சென்றுர்.

''அம்மாள்'' பரம ஏழை. அன்றுடம் உபாதானம் கொண்டு கிடைத்ததை வைத் துக் காலக்ஷேபம் செய்பவர். உடையவர் எழுந்தருளினபோது அம்மாள் வீட்டில் இல்லை. வாயிற் கதவு மூடப்பெற்றிருந்தது. உடையவர் வருகை அறிவிக்கப்பட்டும் கதவு திறக்கப்படவில்லை. ஆனல் உள்ளே அம்மாளின் தேவியார் இருப்பது தெரிந் தது. உடையவர் அவள் உள்ளிருந்தும் வெளி வராமையை உன்னியிருக்கையில் அத்தேவியார் கூறிய சில வார்த்தைகளி லிருந்து அவ்வம்மையார் பிறர் முன் வரத் தகுதியில்லாதபடி கிழிந்த ஆடையுடனிருக் கிருர் என்பதையும், அதனலேயே லஜ்ஜை யுற்று ஒளிந்து நின்று பதிலிறுக்கிருள் என் பதையும் ஊகித்தார். உடனே ஒரு புடவை கொணரச் செய்து அதனைக் கதவிடுக்கின் வழியே உள்ளே எறிய அந்த அம்மை யாரும் அதனையெடுத்து உடுத்தியவளாய்க் கதவைத் திறந்து வெளியே வந்து உடை யவர் திருவடிகளிலே தண்டனிட்டு நின் ருள். உடையவர் அவளை ஆசீர்வதித்து அவளை நோக்கித் தங்களுக்குத் தளிகை தயார் செய்யும்படி கூறினர். அவ்வம்மை யாரும் "அம்மாள் வரும்வரை சற்றுப் பொறுக்கவேணும். தளிகைக்கு வேண்டிய யாவும் அம்மாள் உபாதானம் எடுத்து வந்துதான் ஆகவேண்டும்'' என்று விநயத் தோடு விண்ணப்பித்தாள். உடையவர் தம்முடன் வந்தாரை நோக்கித் தளிகைக்கு வேண்டிய அமுதுபடி, பருப்பு முதலிய யாவையும் கொடுக்குமாறு நியமிக்க, அத் தேவியாரும் அவற்றைப் பெற்று, உள்ளே போய்த் தீர்த்தமாடி, திருவாய்மொழியை அநுஸந்தானம் செய்துகொண்டே தளி கையை முடித்துத் தன் திருவாராதன எம் பெருமானுக்குக் கண்டருளப் பண்ணியிருக்க உடையவரும் அவ்வம்மையாரின் வைஷ் ணவ ஸ்ரீயைக் கண்டு மகிழ்ந்தார். அவ் வளவில் அம்மாளும் எழுந்தருளி, உடைய வர் எழுந்தருளியிருப்பது தெரிந்து, நீரா டித் திருமண் காப்பணிந்து உடையவர் திருவடிகளிலே தெண்டனிட்டு ஸ்ரீபாத தீர்த்தம் பெற்றுர். பின்னர் உடையவர் அம்மாளுடன் தன் போஜனத்தை முடித் துக்கொண்டு, அவர்களது ஞானபக்தி வைராக்கியங்களை மிகவும் பாராட்டி அவர்க ளோடு ஒருநாள் தங்கி மறுநாள் புறப்பட் டார்.

அவ்வளவில் எச்சான் அங்கு வந்து உடையவரைத் தெண்டனிட்டுத் தன்னு டைய திருமாளிகைக்கு எழுந்தருளவேணும் என்று பிரார்த்தித்தான். உடையவர் அவனை நோக்கி 'உனக்கு இன்னும் ஒரு வெள்ளாவிக் கிளைது'' என்றருளிச் செய் தார். எச்சானும் அவ்வார்த்தையின் உட் பொருளை உணர்ந்துகொண்டவனய் உடை

யவரைத் தெண்டனிட்டு "அடியேனுடைய ரஜோகுணம் நீங்க ஒரு வழி கிருபை செய்ய வேணும்" என்று வேண்டி நின்றான். உடையவரும் எச்சானை நோக்கி "நீர் இன்று முதல் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் திருப்பரிவட்டம் திருத்தி யமைத்து வாரும் என்று நியமித்தருளினர். அவனும் அன்று தொடங்கி அக்கைங்கர்யத்தில் ஈடு பட்டான்" என்பதே அந்நிகழ்ச்சி. இனி முன்னைய இதழ் முடிவினின்று துடங்கு வோம்.

அடிவாரத்திலே உடையவர் எழுந்தருளி யிருக்கும் செய்தி, திருமலை மேலிருந்த அநந்தாழ்வான் தொடக்கமான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு எட்டியது. அவர்களனை வரும் ஒரு திரளாகக் கீழிறங்கி உடைய வரைச் சேவித்து அவர் திருமலைமேல் எழுந்தருள வேணும் என்று பிரார்த்தித்த னர். உடையவரும் அவர்களது ஆர் வத்தை உன்னி முறுவலித்தவராய் அனந் தாழ்வானை நோக்கி "நித்ய சூரிகளே சோலையும் தீர்த்தமும் மண்டபங்களும் படி களுமாகவும், பெரிய திருவனந்தாழ்வானே திருமலையாகவும் அவதரித்திருப்பதாக நாம் தெரிந்தோமன்றோ?

"முடிவிலாப் பத்தி வாரிதி யனையாய்
முத்தராய் நித்தராய் நிகழும்
வடிவுடை வானோர் அத்திரு மலைமேல்
மன்னுவர் சாரசர மாகிக்
கொடியனேன் செடியார் யாக்கை
கொண்டதன்மேல் ஏறுதல் தகுவதோ
கூறாய்"

என்று கூறித் திருமலைமேல் அடியிட்டு ஏறக் கூசி நின்றார். வந்தவர்கள் "தேவ ரீரே திருமலைமேல் அடியிடக் கூசுவதானால் நாங்கள் இதுவரை அவ்விதம் செய்து வந்தது தவறென ஆம் அன்றோ? ஆகவே இனி நாங்களும் திருமலை ஏறாது இங்கேயே தேவரீரோடு தங்கிவிடுகின்றோம்" என்று கூறவும், உடையவர் தம் திருவுள்ளத்தே நன்கு ஆராய்ந்து பார்த்தார். "நம்மன நிலையுண்மையை உணராது இவர்கள் இங் கேயே தங்கிவிடின் அப்பனுக்குக் கைங்கர் யம் முடங்கிவிடும்போலல்லவாகாண்கிறது" என்று எண்ணியவராய் அனந்தாழ்வானைக் கடாக்ஷித்து 'நாம் வருகிறோம் புறப்படும்" என்றருளிச் செய்து அடிப்புளியாழ்வாரடி யிலே,

"தெண்டனிட்டேறித் திருமலையாழ்வார்
தம்மையும் சென்றுற வணங்கிப்
புண்டரீகத்துள் திருமகள் கொழுநன்
பொருவரும் வைகுந்த நாதன்
தண்டுழாய் முடியான் பாதபீடத்தில்
தடையறு பிரபத்தி பண்ணிக்
கொண்டணைந்தார்கள் ஏறுதல் போலக்
கோதறு வேங்கடப் பொருப்பில்"

"மன்னுசீரன்பில் பிரபத்திபண்ணி
மறுவறு மிராகவன் துணையாய்
முன்னுதித்திட்டான் பின் மிதித்தேறும்
மொய்த்த சீர்த்திருமலை மீதே
பன்னறு நெறியாய்க் கிடந்த நன்னிலையைப்
பலமுறை கண்டுற வணங்கி"

ஸ்ரீவைகுண்ட நாதன் நியமனத்தால் சேதனன் பாதபீடத்தின் மேலே அடியிட் டேறுமாபோலே ப்ரபத்திபண்ணிக்கொண்டு திருவேங்கடமுடையான் திருமலையில் "செப்பார்திண் வரையையும்" "பன்மணி நீரோடு பொருதுருளும் கானாற்றையும்" "அன்னனைய பொற்குவடுகளையும்" "வேய் கணின்று வெண்முத்தமே சொரியும் கான மும் வானரமும் வேடுமுடை" வேங்கடத் தைக் கண்டு களித்துத் திருப்பரியட்டப் பாறை யளவிலே எழுந்தருளி யிருந்தார்.

அப்போது திருவேங்கடமுடையான் இவர் எழுந்தருளுகிறதில் மிக மனமுவந்த வராய் அநந்தாழ்வான் ஸ்ரீபாதத்தில் ஸ்ரீவைஷ்ணவரைப் போலே ஒரு வெள்ளிப் பாத்திரத்திலே ஒரு தளிகையையும் அதிலே ஒரு அமுதக் கனியையும் வைத்துக்கொண்டு எதிரே வந்து "திருவேங்கடமுடையான் அனுப்பியருளினர்" என்று விண்ணப்பம் செய்தார்.

(தொடரும்)

# தொண்டை நாட்டுத் திருப்பதியநுபவம்

மகாவித்துவான். P. B. அண்ணங்கராசார்ய சுவாமிகள், காஞ்சிபுரம்.

(முன் இதழ்த் தொடர்ச்சி)

உத்தரேதாத்ம நாத்மாநம்
நாத்மா நமவஸாதயேத்,
ஆத்மைவ ஹ்யாத்மநோபந்து:
ஆத்மைவ ரிபுராத்மந:*

என்கிற விந்த ச்லோகம் ஒவ்வொருவருடைய நெஞ்சிலும் அனவரதமும் ஊன்றியிருக்கத்தக்கது. தன்னைக் கொண்டேதான் கடைத்தேறவேணுமென்றும், தன்னைத்தானே கெடுத்துக்கொள்ளலாகாதென்றும், தனக்குத் தானே உறவு, தனக்குத் தானே பகைவன் என்றும் இந்த ச்லோகத்தில் சொல்லப்படுகிறது. ஒருவன் கடைத்தேறுவதற்குப் பல பல ஸாதனங்கள் வேண்டியிருக்கின்றன. ஸத்ஸஹவாஸம் வேணும், ஆசார்யோபசேவை வேணும், பிராட்டியை முன்னிட்டு எம்பெருமான் திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றுதல் வேணும்.........என்றிப்படியாக உஜ்ஜீவனத்திற்கு வேண்டியவை பல இருந்தாலும் இவற்றுள் மிக முக்கியமான ஸாதனம் மனம் ஒன்றேயாம். அதைப் பல்வேறு விஷயங்களில் யதேஷ்டமாகச் செல்லவிட்டு வைத்தால் அது தன்னைத் தானே மாய்த்துக் கொண்டபடியாகும். மனத்தை விஷயக்ராமங்களில் புகவிடாமல் ஆத்மோஜ்ஜீவனத்திற்கு அபிமுகமாக்குமளவில் அந்த மனத்தைக் கொண்டுதான் வாழ்ந்தவனுவன். ஆகவே, மனமானது உறவாயுமிருக்கும், பகையாயுமிருக்கும். உறவாகக் கொண்டு வாழ்வதே விவேகிகளின் பணி; பகையாகக் கொண்டு பாழாய்ப்போக வேண்டமென்று கீதாசாரியன் வெகு பொருத்தமாக உபதேசித்தருளுகின்றுன்.

ஆனது பற்றியே ஆழ்வார்கள் அடிக்கடி நெஞ்சைக் கொண்டாடுகிருர்கள்; *நெஞ்சமே! நல்லை நல்லை உன்னைப் பெற்ருலென் செய்யோம். இனியென்ன குறைவினம்? *என்றும், *ஊனில் வாழுயிரே நல்லை போவுன்னைப் பெற்று* என்றும், முயற்றி சுமந்தெழுந்து முந்துற்ற நெஞ்சே! இயற்றுவாயெம்மொடு நீ கூடி* என்றும் நம்மாழ்வாரருளிச் செய்கிருர். ஆனல் நெஞ்சை அனுகூலமாக்கிக் கொள்வதென்பது மிகவும் அரிதான செயல். *நின்றவா நில்லா நெஞ்சினையுடையேன் என்செய்கேன்* என்கிருர் திருமங்கையாழ்வார்.

அது நிற்க ஜிதேந்த்ரியரில் தலைவனை அர்ஜுனனே மனத்தை வசப்படுத்த வேணுமென்று கூறுகின்ற கண்ணபிரானை நோக்கிச் சொல்லுகிருன்—(6-34)

"சஞ்சலம் ஹி மந: கிருஷ்ண!
ப்ரமாதி பலவத் த்ருடம்,
தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே
வாயோரிவ ஸுதுஷ்கரம்*

என்கிருன். கண்ணு! காற்றைப் பிடித்துக் கரகத்தினுள்ளே அடைக்கவேணுமென்னுமாபோல மனத்தைப் பிடித்து நிலைநிறுத்த வேணுமென்கிருய் நீ; மனமோ இயற்கையாகவே சஞ்சலமானது. ஒரு நொடிப் பொழுது கூட ஒரு விஷயத்தில் ஏகாக்ர

மாக ஒருவனுலும் நிலைநிறுத்த முடியாது; விஷயாந்தரங்களிலுங்கூட ஒன்றில் ஒன்றி நிற்க மாட்டாத நெஞ்சை நல்விஷயத்தில் ஒன்ற வைப்பதென்பது மிகவுமரிது என்று நான் நினைக்கிறேன்; மநோநிக்ரஹத்திற்குரிய உபாயத்தை உரைக்க வேணும் என்ருன் அர்ஜுனன்.

இதற்குக் கண்ணபிரான் கூறிய மறுமொழி என்னவென்று பார்த்தாலோ,

"அஸம்சயம் மஹாபாஹோ!
மநோ துர் நிக்ரஹம் சலம்,
அப்யாஸேநது கௌந்தேய!
வைராக்யேண ச க்ருஹ்யதே*

என்பதுதான் கண்ணனுடைய மறு மாற்றம். மனத்திற்கு சஞ்சலத்வம் இயற்கைக் குணமாதலால் அதைப் போக்கி அதனை ஒன்றில் ஒன்றவைப்பதென்பது முடியாத காரியந்தான்; இதில் ஸந்தேஹமேயில்லை; ஆனுலும் விஷயதோஷங்களைக் காணக் காண வைராக்யமுண்டாகக் கூடுமாதலால் மனத்தை யடக்கப் பழக்கம் செய்து நாளடைவில் ஸாதிக்கவேணும்—என்பது கண்ணனுடைய பதில்.

இவ்விடத்தில் "அஸம்சயம்" என்பதற்கு சங்கராசார்ய சுவாமிகளின் பாஷ்யம்—மனத்தை யடக்குவது முடியாத காரியமென்பதில் ஐயமில்லை என்றுள்ளது; அப்படியின்றிக்கே தாத்பர்ய சந்திரிகையில் "அஸம்சய மென்பது பாதியங்கீகாரத்தைக் காட்டும்" என்றுள்ளது. உலகில் வார்த்தையாடும்போது "ஒப்புக்கொண்டேன்" என்பர் சிலர். இது பாதியங்கீகாரமேயாம்.

இனி ஏழாவது அத்யாயத்திற் செல்வோம். இவ்வத்யாயத்தை யிட்டு கீதைக்கு ஒரு அபக்யாதி விளைந்திருப்பதுண்டு; ஓரூரில் ஒரு பண்டிதர் கீதா ப்ரவசனம் செய்து கொண்டிருந்தாராம். பலர் கேட்டுக்கொண்டிருந்தார்கள். ஒருவர் மாத்திரம் அந்த கோஷ்டியில் அந்வயிப்பதில்லை. ஆப்தர்கள் அவரை வெகு நிர்ப்பந்தித்து ஒரு நாள் கீதா காலக்ஷேப கோஷ்டியில் அந்வயிப்பித்தார்கள். அவர் வந்து சேர்ந்த தினத்தில் ஏழாமத்யாயத்தில் பதினைந்தாம் ச்லோகம் ஆரம்பிக்கப்பட்டதாம். அதாவது—

"நமாம் துஷ்க்ருதிநோ மூடா:
ப்ரபத்யந்தே நராதமா:,
மாயயா அபஹ்ருதஜ்ஞாநா:
ஆஸுரம் பாவமாச்ரிதா:*

என்பது. இந்த ச்லோகம் முழுவதும் நிந்தையே நிறைந்திருப்பதால் பாஷ்யாதிகளையும் அநுஸரித்து அந்த நிந்தைகளை வெகு விரிவாக உபந்யஸித்தார் ப்ரவசநகாரர். அன்றே புதிதாகக் கேட்க வந்தவர் இந்த கீதையில் இப்படிப்பட்ட நிந்தைகள் தாம் நிறைந்திருப்பன போலும் என்றெண்ணி மிகவும் வெறுப்படைந்தாராம். மறுநாளும் 'இன்றைக்கு விஷயம் எப்படி யிருக்கிறது பார்ப்போம்' என்று பரீக்ஷார்த்தமாகக் காலக்ஷேப கோஷ்டிக்கு வந்தாராம்; அன்று அதற்கடுத்த சுலோகம்—(7-16)

"சதுர்விதா பஜந்தேமாம்
ஜநாஸ் ஸுக்ருதி நோர்ஜுந,
ஆர்த்தோ ஜிஜ்ஞாஸு ரர்த்தார்த்தீ
ஜ்ஞாநீ ச பரதர்ஷப*

என்பது விரிவாக உபந்யாஸிக்கப்பட்டதாம். முன் ச்லோகத்தில் நிந்தை நிறைந்தது; இந்த ச்லோகத்தில் ஸ்துதி நிறைந்தது. இரண்டும் பிசகுதானே. அதனுல் அந்த ச்ரோதா 'கீதையில் வீணை நிந்தையும் ஸ்துதியும் தவிர வேறு கிடையாது' என்று முடிவு செய்துகொண்டு மூன்ரு நாள் தொடங்கிக் காலக்ஷேபத்திற்கு வருவதை நிறுத்திக் கொண்டாராம். ஏன் வருவதில்லை யென்று கேட்பவர்களுக்கு "கீதையில் என்ன இருக்கிறது; பரநிந்தை பத்தத்யாயம்; ஆத்மஸ்துதி ஆறத்யாயம்; இன்னுமேதாவது விஷயங்கள் இரண்டத்யாய மிருக்கும்." என்ருராம்.

இது இவருடைய மருள் இருந்தபடி. திருவாய்மொழியில் (3-5) *மொய்ம்மாம்

பூம்பொழிற் பொய்கைப் பதிகமும் இந்த ஏழாமத்யாயமும் ஒரு நிகராக நினைக்கப் படலாம். அப்பதிகத்தின் ஸாரத்தை நூற்றந்தாதியிலருளிச் செய்த மணவாள மாமுனிகள் "அன்பாலாட் செய்பவரை யாதரித்தும், அன்பிலா மூடரை நிந்தித்தும் மொழிந்தருளும் மாறன்" என்கிறார். நிந்திக்க வேண்டியவர்களை நிந்திப்பதும் ஸ்துதிக்க வேண்டியவர்களை ஸ்துதிப்பதும் ப்ராப்தந்தானே.

அது நிற்க.

**"சதுர்விதா பஜந்தே மாம்"**

என்கிற ச்லோகத்தில் **ஆர்த்த:, ஜிஜ்ஞாஸு:, அர்த்தார்த்தீ, ஜ்ஞாநீ** என்று நால்வகை யதிகாரிகள் கூறப்படுகிறார்கள். இவர்களை விவரிக்கின்ற சங்கராசார்ய ஸ்வாமிகள் தமது பாஷ்யத்தில்—திருடர் புலி பிணி முதலியவற்றால் துன்பமடைந்தவனை **ஆர்த்தன்** என்றும், பகவானை யறிய விரும்புகிறவனை **ஜிஜ்ஞாஸு**வென்றும், தனம் பெற விரும்புமவனை **அர்த்தார்த்தி** யென்றும், விஷ்ணு தத்துவமறிந்தவனை **ஞானி**யென்றும் விவரித்திருக்கின்றார்.

ஸ்ரீ பாஷ்யகாரரான ஸ்வாமி யெம்பெருமானார் இழந்துபோன செல்வத்தை மீண்டும் பெறவிரும்பின **ப்ரஷ்டைச்வர்ய காமனை** ஆர்த்தனென்றும், **அபூர்வைச்வர்ய காமனை** அர்த்தார்த்தி யென்றும், **கைவல்ய காமனை** ஜிஜ்ஞாஸு வென்றும், **ஸ்வஸ்வரூப முணர்ந்தவனை** ஞானியென்றும் விவரித்தருளுகிறார். இவற்றுள் எந்த விவரணத்தில் பொருத்தமுள்ள தென்பதைப் பற்றி நாம் இங்கு விவரிக்க விரும்பவில்லை. இங்ஙனே விலக்ஷணமான விவரணத்தை ஸ்ரீராமாநுஜர் செய்தருளியதற்கு மூலமென்ன? என்று விமர்சிக்க ப்ராப்தம். இதை விமர்சிக்குமளவில், ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்தியை அடியொற்றிப் பேசவேணுமென்று ஸ்வாமி கொண்டிருந்த உறுதி தான் இதற்கு மூலமென்று நன்கு புலப்படும். திருப்பல்லாண்டில், *வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல்* என்கிற பாசுரத்தில் ஞானிகளையழைத்தும்,* ஏடுநிலத்திலிடுவதன் முன்னமென்கிற பாசுரத்தினால் கைவல்யார்த்திகளை யழைத்தும்,* அண்டக் குலத்துக்கதிபதியாகி யென்கிற பாசுரத்தினால் அபூர்வைச்வர்ய காமர்களையும் ப்ரஷ்டைச்வர்ய காமர்களையுமழைத்தும் உபதேசம் தந்தருளியிருப்பது ஸுஸ்பஷ்டம். இதுவன்றியும் திருவாய்மொழியில் *ஒரு நாயகமாய்* என்கிற பதிகத்தில் இந்நால்வகை யதிகாரிகளும் தெரிவிக்கப்பட்டிருப்பதும் ப்ரஸித்தம். கீதையிலுள்ள *சதுர்விதா பஜந்தே மாம்* என்னுமிந்த ச்லோகத்தை யடியொற்றியே அந்தப் பாசுரங்கள் திருவவதரித்தனவாக ஸம்ப்ரதாய மாகையாலே *மாறனுரை செய்த தமிழ் மறை வளர்த்தவரான ஸ்வாமி யெம்பெருமானார் திவ்யப்ரபந்தச் சாயையிலேயே அருளிச் செய்தாரென்பது இங்குக் குறிக்கொள்ள வேண்டிய பரமார்த்தம்.

மற்றுமொரு விசேஷமிங்கு நெஞ்சிற் பதிய வைத்துக் கொள்ளத் தக்கதுண்டு. ஸ்ரீவசநபூஷணத்தில் (73) "அஹமர்த்தத்துக்கு ஜ்ஞாநாநந்தங்கள் தடஸ்தமென்னும்படி தாஸ்யமிறே அந்தரங்க நிரூபகம்" என்ற சூர்ணையின் வியாக்யானத்தில்—"திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாதத்திலே ஆழ்வான் ஆறுமாஸம் ஸேவித்து நின்று மஹாநிதியாகப் பெற்ற அர்த்தமிறேயிது" என்று மணவாள மாமுனிகள் அருளிச் செய்கிறார். எம்பெருமானார் கோஷ்டியில் ஒரு நாள் 'ஜீவாத்மாவுக்கு அந்தரங்க நிரூபகம் ஜ்ஞாத்ருத்வமா? சேஷத்வமா?' என்று விசாரமுண்டாக, எம்பெருமானார் கூரத்தாழ்வானைத் திருக்கோட்டியூர் நம்பி பக்கலில் விடைகொண்டு இதை யறிந்து வருமாறு நியமித்தருள, ஆழ்வான் அப்படியே விடைகொண்டு ஆறுமாஸம் சேவித்திருந்து சேஷத்வமே அந்தரங்க நிருபகமென்று தெளிந்து மீண்டதாக ஐதிஹ்யமுள்ளது. அப்படி மஹாநிதியாகப் பெற்று வந்த மஹார்த்தத்தை ஸ்வாமி யெம்பெருமானார் எவ்விடத்திலாவது பதிய வைத்திருப்பதுண்டோவென்று சிலர் கேட்பதுண்டு. அவர்களுக்குச் சொல்லுகிறோம்; *சதுர்

விதா பஜந்தே மாம்* என்கிற இந்த கீதா ச்லோகத்தின் பாஷ்யத்தில் ஜ்ஞாநீ என்பதற்கு அர்த்தம் செய்தருளுமிடத்து "பகவச் சேஷத்வமே வடிவெடுத்த ஆத்ம ஸ்வரூபத்தை யுணர்ந்தவன் ஞானி" என்றருளியுள்ளார். விஷ்ணு தத்வத்தை யறிந்தவனே ஜ்ஞாநி யென்றார் சங்கராசாரியர்; ஜீவாத்ம ஸ்வரூபத்தை யறிந்தவனே ஜ்ஞாநி யென்கிறார் நம் ஸ்வாமி. அந்த ஜீவாத்மாவுக்கு விசேஷண மிடுகிறார் (பகவச் சேஷைதகரஸ) என்று. ப்ரஹ்ம ஸூத்ரகாரர் *ஜ்ஞோ தஏவ என்கிற ஸூத்ரத்தினால் ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வத்தை ஸ்தாபித்திருக்கிறார். ஜ்ஞாதா என்பதற்கு 'அறியுமவன்' என்று பொருள். எதை அறியுமவன்? என்று கேள்வி வரில், தான் பகவச் சேஷ பூதன் என்பதை யறியுமவன் என்று பொருள் சொல்ல வேண்டுமென்பது ஸ்ரீராமாநுஜர் திருவுள்ளம் போலும். "பகவச்சேஷைதகரஸ ஆத்ம ஸ்வரூப" என்னும் சொல் தொடர் இதரர்களின் நூல்களொன்றிலும் எத்தனைகாலம் தேடினாலும் கிடைக்கமாட்டாது. இப்படி விலக்ஷணமான ஸ்ரீஸூக்தியை அஸக்ருத் அருளிச் செய்திருக்கின்ற நம் ஸ்வாமி, திருக்கோட்டியூர் நம்பி பக்கலில் நின்றும் ஆழ்வான் கொணர்ந்த நிதியைப் பெற்றவரென்பதில் ஸந்தேஹமுண்டோ?

இதற்கடுத்த (7-17) *தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த:* என்னும் ச்லோகத்தின் உத்தரார்த்தம் "ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்த மஹம் ஸ ச மம ப்ரிய:" என்றுள்ளது. இங்கு நம் ஸ்வாமி "ஜ்ஞாநிந: அஹம் அத்யர்த்தம் ப்ரிய:" என்று க்ரமாந்வயத்தையே திருவுள்ளம் பற்றி பாஷ்யமிட்டருளினார். இவ்வந்வய க்ரமத்தில்—ஞானிக்குத் தன்னிடத்தில் ப்ரீதி அதிகமா? ஞானியிடத்தில் பகவான் வைத்திருக்கிற ப்ரீதி அதிகமா? என்று ஆராய்ந்து பார்க்குமளவில் ஞானியிடத்தில் பகவான் வைத்திருக்கிற ப்ரீதி தான் அதிகமென்னத்தகும். ஆகவே இந்த ச்லோகத்தில் (அத்யர்த்தம்) என்பதை 'அஹம் ப்ரிய:' என்பதிலேகூட்டுவதைவிட 'மம ப்ரிய:' என்பதிலே கூட்டுவதுதான் ரஸவத்தரமென்று திருவுள்ளம் பற்றின ஸ்ரீராமாநுஜர் ஸ்ரீபாஷ்யத்தில் சரமஸூத்ரமான *அநாவ்ருத்தி ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் "அத்யர்த்த ப்ரியம் ஜ்நாரிநம் லப்த்வா" என்கிற அநர்க்கமான வாக்யத்தினால் அந்த அந்வய க்ரமத்தையும் காட்டியருளினார். அந்த ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியின் படி ப்ரக்ருத கீதா ச்லோகாந்வயம் எப்படி கொள்ளவேணுமென்னில்; "ஜ்ஞாநிந: அஹம் ப்ரிய:; ஸ ச மம அத்யார்த்தம் ப்ரிய:" என்றிங்ஙனே கொள்ள வேணும்.

இனி எட்டாமத்யாயத்தில் ஒரு மஹாநிதி காட்டுவோம். ஸம்ஸாரிகளின் விஷயோபபோக ப்ரவ்ருத்தியானது நிஷித்த விஷய போக மென்றும், விஹிதவிஷய போகமென்றும் இரண்டாகப் பிரிக்கப்படுகிறது. சாஸ்த்ரங்களில் கர்ஹிக்கப்பட்ட பரதார போகமானது நிஷித்த விஷய போகமாகவும் சாஸ்த்ரஸம்மதமான ஸ்வதாரபோக மான இல்லறவாழ்க்கை விஹித விஷய போகமென்றும் வழங்கப்படுகின்றது, இவற்றில் விஹித விஷய போகமானது க்ருஹஸ்தாச்ரம தர்மமாகையாலே ப்ராப்த மென்று கொள்ளப்படுகிறது. ஆனால், அநந்யார்ஹ சேஷத்வ அநந்ய சரணத்வங்களோடு கூட அநந்ய போக்யத்வ மென்கிற விலக்ஷணமான நன்மையையும் பெற்றிருக்கின்ற விசேஷாதிகாரிக்கு இந்த விஹித விஷய போகம் அருவருக்கத் தக்கதாய் த்யாஜ்யமே யாகு மென்பது ஸத்ஸம்ப்ரதாய நிஷ்டர்களின் ஸித்தாந்தம். சாஸ்த்ரங்களில் ஸ்வதார போகம் நியமமாக விதிக்கப்பட்டு, அது தவிர்ந்தால் தோஷமும் பிரதிபாதிக்கப் பட்டிருக்கையிலே விஹித விஷய நிவ்ருத்தி அசாஸ்த்ரீய மென்று பிறருடைய கொள்கை காண்கிறது. ஸ்ரீ வசந பூஷணத்தில் இரண்டு மூன்றிடங்களில் உத்தமாதிகாரிக்கு விஹித விஷய நிவ்ருத்தியைத் தன்னேற்றமாக வருளிச் செய்கிறார் பிள்ளைலோகாசார்யர். அவ்

விஷயம் கீதையில் (8-3)ச்லோகத்தின் பாஷ்யத்தில் ஸ்பஷ்டமாக அருளிச் செய்யப்படுகிறது. அதனை விவரிப்போமிங்கு;—

கீழ் ஏழாவது அத்யாயத்தின் முடிவில் கண்ணபிரான்* ஜராமரண மோக்ஷாய* என்கிற இருபத்தொன்பதாம் ச்லோகத்தில் "தேப்ரஹ்ம தத் விதுக்ருத்ஸ்நமத்யாத்மம் கர்ம சாகிலம்" என்று ஒரு வார்த்தை சொன்னான். அது கேட்ட அர்ஜுநன் அந்த வார்த்தைக்கு உண்மையான பொருளைத் தெரிந்து கொள்ள வேண்டிக் கண்ணனையே கேள்வி கேட்கிறான். எட்டாம்அத்யாயத்தின் 1, 2-ச்லோகங்களினால் "கிம்தத் ப்ரஹ்ம கிமத்யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம" என்று தொடங்கிக் கேள்விகள் உள்ளன. மூன்றாவது ச்லோகம் தொடங்கிக் கண்ணபிரானுடைய விடை வெளிவருகின்றது. கிம்கர்ம? என்ற கேள்விக்குக் கண்ணனுடைய விடை "பூத பாவோத்பவகரோ விஸர்க்க: கர்மஸம்ஜ்ஞித:* என்பது. இங்கு விஷயமென்ன வென்றால் கேண்மின்.

சிலவற்றை அறியவேண்டும் என்று பகவான் நியமித்து வருகையில் கருமத்தை அறிய கவண்டும் என்று சொல்லியிருந்ததனால் கருமமென்றால் எது? என்று அர்ஜுநன் கேட்க நேர்ந்தது. அதற்குப் பகவான் விடை கூறியுள்ளார். ஒருவன் ஒன்றையறிவதானது, பற்றுவதற்காகவும் ஆகலாம், விடுவதற்காகவும் ஆகலாம். நல்லதாயிருந்தால் பற்றுவது, கெட்டதாயிருந்தால் விடுவது. ஆகவே நல்லதையும் தெரிந்து கொள்ளவேண்டும், கெட்டதையும் தெரிந்து கொள்ளவேண்டும். இங்கே தெரிந்து கொள்ள வேண்டியதாகக் கூறப்பட்ட கருமம் நல்லதன்று, கெட்டது —என்பதாக பகவானுடைய விடையினால் தெரிகிறது.* பூத பாவோத் பவகரோ விஸர்க்க: கர்ம ஸம்ஜ்ஞித:* என்பதற்கு நம்முடைய ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிச் செய்திருக்கிற அர்த்தம் வருமாறு :—

ஸ்த்ரீ புருஷ ஸம்யோக மென்பது தான் இங்கே கரும மென்கிறது. இது மிகவும் அருவருக்கத் தக்கதாகையால் விடத்தக்கதாக இதனை யறிய வேண்டும். இதை விடவேண்டுமென்பது மேல் பதினோராவது ச்லோகத்திலும் காட்டப்படுகிறது என்பதாம். இதனால் நாம் தெரிந்து கொள்வது க்ருஹஸ்தாச்ரம தருமமாக விஹித விஷயபோகம் ப்ராப்தமேயானாலும் அது விசிஷ்டாதிகாரிக்கு ஜுகுப்ஸநீயமே யென்று. ஆகவே இவ்விஷயத்தின் ஸ்ரீ வசன பூஷண ஸித்தாந்தம் நிரவத்யமென்றுணர்க. இவ்விடத்தில் சங்கர பாஷ்யத்திலோ மத்வ பாஷ்யத்திலோ இவ்வர்த்தம் காண ப்ரஸக்தியேயில்லை.

இனி ஒன்பதாமத்யாயத்தில் ஸாரமானதைச் சிறிது அனுபவிப்போம்*-பத்ரம் புஷ்பம் பலம் தோயம்யோமே பக்த்யா ப்ரயச்சதி, தததஹம் பக்த்யுபஹ்ருதமச்நாமி ப்ரயதாத்மந:* (9-26) என்கிற ச்லோகத்தினால் கண்ணபிரான் தான் ஆராதனைக் கெளியன் என்னுமிடத்தை வெகு அழகாக அருளிச்செய்கிறான். இதர தெய்வங்களிற் காட்டில் எம்பெருமான் எத்தனையோ விதங்களால் நெடுவாசி பெற்றிருப்பது போல, இவ்வகையாலும் நெடுவாசி பெற்றிருக்கிறான்! 'ஆடு பலி கொடு. கோழி பலி கொடு' என்று அருந்தேவைகளை யிட்டு மஹா பரிச்ரம ஸாத்யங்களான ஆராதனைகளை அபேக்ஷித்திருக்கும் தேவதாந்தரங்கள். எம்பெருமான் படியோ அப்படியன்று. நாம் இட்டது கொண்டு த்ருப்தி யடைவதே அவனது ஸ்வரூபம். எம்பெருமானுக்கு நாம் சில பொருள்களை ஸமர்ப்பிப்பதானது அவனுக்கு ஏற்கெனவே யில்லாததொரு பூர்த்தியையுண்டாக்குவதற்காகவா? நாம் ஸத்தை பெறுவதற்காகவா? என்று ஆராய வேண்டும். அவனோ அவாப்த ஸமஸ்தகாமன்; அன்னவன் குறையுற்றிருந்து நாமிட்டது கொண்டு பூர்த்தியடைகிறானென்பது அஸம்பாவிதம். கடலிலே மேகம் வர்ஷிப்பது கடல் நிரம்புவதற்காகவன்றே. "வர்ஷ

பிந்தோரிவாப் தேஜ ஸம்பந்தாத் ஸ்வாத் மலாப:* என்று (ஸ்ரீ ரங்க ராஜஸ்தவே) பட்டர் அருளிச் செய்த படியே, மேகம் தான் ஸத்தை பெறுவதற்காகவே கடலி லும் வர்ஷிக்கின்ற தென்பது பரமார்த்தம். அதுபோலவே ஸ்வத: பரிபூர்ணனை பரம புருஷன் திறத்தில் நாம் சிலபொருள் களை ஸமர்ப்பிப்பது நமது ஸ்வரூபம் நிறம் பெறுவதற்கேயன்றி அவனை நிரப்புவதற் கன்று என்பது வெளிப்படை. ஆகவேநாம் சிறந்த பெரும் பொருள்களைத் தேடியிட வேணு மென்பதில்லை. இடுகிற பொருள் எதுவாயினும் இடுவது ப்ரேம பூர்வகமாக வேணுமென்ப தொன்றிலேயே நியதியுள் ளது. திருமங்கையாழ்வார்* கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும் முள்ளார் முளரியுமாம்பலுமுன் கண்டக்கால் புள்ளா யோ ரேனமாய்ப் புக்கிடந்தான் பொன் னடிக்கென்று, உள்ளாதாருள்ளத்தை யுள்ளமாக் கொள்ளோமே* என்று பெரிய திருமொழியில் (11-7-6) அருளிச் செய் கிறார். திருத்துழாய் முதலிய எந்த வஸ்து வைக் கண்டாலும் 'இது எம்பெருமானுக் குச் சாத்தத் தக்கது' என்று அத்யவஸா யங் கொள்ளாதாருடைய நெஞ்சை நெஞ்சாகக் கொள்ள மாட்டேம் (நஞ்சாக வே கொள்ளுவோம்) என்று உரைக்கின்ற இப்பாட்டில், எம்பெருமானுக்கே உரித் தான திருத்துழாயோடு விஜாதீய வஸ்துக் களும் கூட்டியெடுக்கப் பட்டிருத்தலால், எம் பெருமானுக்கு ஸமர்ப்பிக்க வேணு மென்கிற சுத்த பாவத்துடனே கொள்ளு கிற புஷ்பம் எதுவாயிருந்தாலும் குற்ற மில்லை;* செண்பக மல்லிகையோடு செங் கழு நீரிருவாட்சி * என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற புஷ்பங்களாகவேயிருக்க வேணுமென்கிற நியதியில்லை, ஏதேனு மொரு புஷ்பமாக இருக்கலாமென்பதும், பக்திப் பெருங் காதலே முக்கியமானதென் பதும் தோற்றுவிக்கப்பட்டன.* பத்ரம் புஷ்பம்* என்று மேலே யெடுத்த கீதாச் லோகமும்—'இடுகிற பொருளில் வாசி பார்ப்பதில்லை; இடுகிறவன் நெஞ்சில் ஈரமுள்ளதா என்பதொன்றையே பார்ப் பேன்' என்று ஸ்பஷ்டமாகக் காட்டுகின் றது. பூர்வார்த்தத்தில் 'யோமே பக்த்யா ப்ரயச்சதி' என்று சொல்லி வைத்து உத்தரார்த்தத்திலும் 'தத்பக்த்யுபஹ்ருதம் என்று மீண்டும் சொல்லியிருக்கிறதல்ல வோ? தத் என்றுலே போது மாயிருக்க 'பக்த்யுப ஹ்ருதம்' என்றது அநாவச்யக மேயன்றோ? தாத்பர்யசந்திரிகையில்இஃது எடுத்துக் காட்டப்படுகிறது.

இனி, பத்து பதினொன்று: ஆகிய இரண்டத்யாயங்களின் ஸாரங்களைச் சேர்த்து அநுபவிப்போம். பத்தாவது அத்யாயத்திற்கு விபூத்யத்யாயமென்று பெயர்; பதினோராமத்யாயத்திற்கு விச்வ ரூபாத்யாய மென்று பெயர்; பத்தாமத் யாயத்திற்கு ஸ்வாமி யெம்பெருமானு ருடைய அவதாரிகை வருமாறு:— கீழே பக்தியோகம் ஸாங்கமாக விவரித்துரைக் கப் பட்டது; இப்பொழுது; பக்தியுண்டா வதற்காகவும் அது வளருவதற்காகவும் எம்பெருமானுடைய (தன்னுடைய) நிகரற்ற ஐச்வர்யம் முதலிய திருக்கல் யாண குணங்களின் திரள் அளவு கடந் திருக்கிறபடியையும், உலகமெல்லாம் தனக்கு சரீரமாயிருக்கையாலே அவனு ருவாய் அவன் ஏவச் செல்லும்படியாயிருக் கின்றமையும் விஸ்தரித்துச் சொல்லப் படுகின்றன—என்று இடையிடையில் அர்ஜுநன் கேள்வி கேட்டால் அதற்கு மேல் கண்ணன் விடை கூறுவது என்கிற முறையை இவ்விடத்தில் வைத்துக் கொள்ளாமல் தானாகவே *பூய ஏவ மஹா பாஹோ! ச்ருணு மே பரமம் வச: * (10-1) என்று, மீண்டும் நான் சொல்லுவதைக் கேளப்பா! என்று ஆரம்பித்துச் சொல்லு கிறான்; இப்படி அப்ருஷ்டோத்தரமாகச் சொல்லுவது கூடுமோ வென்று சங்கிக்க இடமில்லாதபடி உத்தரார்த்தத்தில்* யத்தேஹம் ப்ரீயமாணாய வக்ஷ்யாமி ஹித காம்யயா* என்று ச்ரோதாவான அர்ஜு நனுடைய முகத்தில் ப்ரீதி விசேஷத்தைக் கண்டு இவனுக்கு இன்னமும் விரிவாகச் சொல்லியே யாக வேண்டுமென்று திருவுள்ளம் பற்றிச் செல்லுவதாகக் காட்டப்படுகிறது.

(தொடரும்)

# கீதா ஸாரம்

—: காரப்பங்காடு ஸ்ரீ வேங்கடாசார்ய சுவாமிகள், மயிலாப்பூர். :—

(முன் இதழ்த் தொடர்ச்சி)

சீற்றம் என்பது குணமா? குற்றமா? அருள் என்பது குணமா? குற்றமா? என்று ஒருவர் வினவினால், சீற்றத்தையும் அருளை யும் குணம் என்றும் கூறலாம்; குற்றம் என் றும் கூறலாம். தகுதியற்ற இடத்தில் உண்டாம் சீற்றம் குற்றமேயாகும். தகுதி யுற்ற இடத்தில் உண்டாம் சீற்றம் குணமேயாகும். இதற்கு ஓர் உதாரணம் காட்டுவோம்.

"இராமபிரானுக்கு முடிசூடும் தருணத் தில், இருவரங்களைக் கைகேசி கேட்ட போது, சக்ரவர்த்தி மோஹித்துக் கிடக்கி ருர். ஸுமந்திரனுலே அழைக்கப்பெற்று அங்கு எழுந்தருளின இராமபிரான் உண் மையை உணர வினவினன். அப்போது கைகேசி, "பரதன் முடிசூடி இங்குப் பரிபா லனம் செய்தல் வேண்டும்; இராமன் காட் டிற்குப் பதினுன்கு வருஷம் செல்ல வேண் டும்'' என்னும் இரண்டு வரங்களை, தான் சக்ரவர்த்தியிடம் கேட்டதாகவும், அச்சக்ர வர்த்தி ஸத்யவாதியாய் இருத்தலின், முன்னமே இரண்டு வரங்கள் கொடுப்ப தாகச் சொன்னபடி, அவ்விரண்டு வரங் களை அளித்திருப்பதாகவும், இவ்விஷ யத்தை (இராமனுகிய) உன்னிடம் சொல்ல முடியாமல் கிடக்கிருர் என்பதையும் கூறி னுள். இதைச் செவியேற்ற இராமபிரான் சிறிதும் சீற்றமின்றி, அப்போதலர்ந்த செவ்வித்தாமரை போன்று முகமலர்ச்சி யுடன் வனம் சென்ருன்'' என்பது இராமா யணத்தில் ப்ரஸித்தமான வரலாருகும்.

இத்தருணத்தில், இராமபிரானுக்குச் சீற்றம் உண்டாகியிருக்குமேயானுல், அப் பரமனை, ''குணங்கள் நிரம்பியிருக்கப் பெற் றவன்; சிறிதும் கெட்ட குணம் இல்லாத வன்'' என்று உலகம் கொண்டாடிக் கூற இடம் ஏற்படுமோ? ஏற்படாதன்ருே? இதை ஊன்றிக் காண்பாருக்கு, 'சீற்றம் குணமன்று; குற்றமேயாகும்' என்பது தெளிவு. இனி, இராமாயணத்தில் மற் ருேர் இடம் காண்போம்.

இலக்குமணன் சக்தியினுல் அடிபட்டு மோஹித்துக் கிடக்குங்கால், இராமபிரான், அராமமாகவோ (இராமன் இல்லாததா கவோ) அராவணமாகவோ (இராவணன் இல்லாததாகவோ) இருக்கிற இவ்வுலகை நீங்கள் பாருங்கள். **''அராவணம் அரா மம் வா ஜகத்ரக்ஷ்யத வாநரா''** என்று சீறிச் சிவந்து பேசியிருக்கிருன்.

இங்கு, இராமபிரானுடைய சீற்றம் குண மாகக் கொண்டாடப்பட்டுள்ளது. இச் சமயத்தில் இராமபிரான் சிறிதும் சீற்ற மின்றி, பரமசாந்தனுய் இருப்பின், அவனை, 'குணம் நிரம்பியிருப்பவன்' என்று கூற இடம் உண்டோ? இல்லையன்ருே? இத னுல்,"சீற்றம் அந்தந்த இடத்திற்கு ஏற்பக் குற்றமாகவும் குணமாகவும் காணப்படுகின் றது'' என்பது மிகத் தெளிவு.

சீற்றம் போன்றே அருளும் ஓர் இடத் தில் குற்றமாகவும், வேருேர் இடத்தில் குணமாகவும் காணப்படுகின்றது. சிகித்ஸை செய்யும் வைத்தியன் கத்தியி னுல் கட்டி முதலியவைகளை அறுத்துச் சிகித்ஸை செய்யுங்கால், அவனிடம் அருள் இருக்குமேயாயின் அது குணமா குமோ? குற்றமேயன்ருே? உண்ண உண

வும், உடுக்க உடையும், நிற்க நிழலும் இல்லாது தபிக்கும் ஓர் ஏழையைக் கண்ட வனுக்கு இரக்கம் ஏற்படாவிடின், அவனைக் குணவான் எனக் கொண்டாட இடம் ஏற் படுமோ? ஏற்படாதன்றோ? இதனாலும், அருள் ஓரிடத்தில் குற்றமாகவும், வேறோர் இடத்தில் குணமாகவும் காணப்படு கின்றதல்லவா?

இதுபோன்று, க்ஷத்திரியனான அர்ஜ் ஜுனனுக்குப் போர் செய்யும் தருணத்தில் தகுதியற்ற இடங்களில் (உறவினர் முத லானோர் பக்கல்) அன்பும் அருளும் குற்றமே யாகும். இக்கண்ணாலே கண்டு ஆளவந் தார், "அஸ்த்தாந ஸ்நேஹ காருண்ய..." என்னுமிடத்தில் அர்ஜ்ஜுனன் குற் றத்தை வெளியிட்டிருக்கிறார். அதை ஸ்ரீராமநுஜரும், "பந்துஸ்நேஹேந பயாக் ருபயா தர்மாதர்மபயேநச" என்னும் பகுதி யினால் அருளிச் செய்திருக்கிறார்.

இனி, வேறொரு கண்ணால் காணுங்கால், அர்ஜ்ஜுனன் குணங்கள் நிரம்பியிருக்கப் பெற்றவன் என்று கொண்டாடிக் கூறவும் இடம் உண்டு. இதை, பின்குறிக்கப் பெறும் ஆழ்வார் திருவாக்கினால் நன்கு அறியலாம்.

"நீர்மையில் நூற்றுவர் வீய ஐவர்க்
கருள் செய்து நின்று
பார்மல்கு சேனைஅவித்த பரஞ்சுடரை
நினைந்தாடி"

என்பது.

### இத்திருவாக்கின் கருத்து

ஸ்ரீ பார்த்தஸாரதி தான் தூதுபோய் தருமபுத்திரர் முதலானோரையும் துரியோத னன் முதலானோரையும் சேரவிடலாமோ என்று பார்த்தபோது துரியோதனன் முத லானோர் "எங்கள் உறவினர் உயிரோடு இருப்பின், நாங்கள் உயிருடன் இருப்ப தில்லை. அவர்களுக்கு ஒரு குடியிருப்பும் கொடோம். நாங்கள் பலராகையாலே பூமிப் பரப்படங்க எங்களுக்கே இடம் போதுமானது. அவர்களுக்குக் கண்ணனா கிய நீயும் தருமமும் உண்டு. அவர்கள் சுவர்க்கத்தை அனுபவிக்கக் கடவர்கள். நாங்கள் பூமியை ஆளுவோம்" என்று வெட்டிதாக வார்த்தை சொல்ல, அதனால் நூற்றுவரை அழியச் செய்தான். பாண்ட வர், "நாங்கள் பந்துக்களை ஒழிய ஜீவிக்க மாட்டோம். நாட்டார் பொருள் தேடுவ தும், இராஜ்யம் தேடுவதும் எல்லாம் பந் துக்களும் தாங்களும் கூட வாழ்வதற் கன்றோ? ஆனபின்பு, நாங்கள் உறவின ரைக் கொன்று உயிருடன் இருக்கப் பார்க் கிலோம்." (யேஷாமர்த்தே காங்க்ஷிதம் ந: ராஜ்யம் போகா: ஸுகாநிச) என்று சொல்ல, இப்பாண்டவரைப் பரம புருஷன் வாழ்வித்தது. "நீர்மையின்மையின் நூற்று வரைக் கொன்றான். நீர்மையோடு இருக் கின்றமையின் பாண்டவரை வாழ்வித் தான் பரமன்" என்பது இங்கு ஸாரப் பொருளாகும்.

இவ்விடத்தில், போர் புரியும் பூமியில் தகுதியற்ற இடத்தில் உண்டான அன்பு அருள் இவற்றால் கலங்கினதாகையாலே அவ்வன்பும் அருளும் குற்றமாகிலும், உறவினரை ஒழிய நாங்கள் உயிருடன் வாழ்வதில்லை என்னும் எண்ணம் பஞ்ச பாண்டவர்க்கு எப்போதும் உண்டாகை யாலே, மற்றைப்போது இவ்வெண்ணம் மஹாகுணமேயாகும் என்பதுஆழ்வார்திரு வுள்ளக் கருத்தாம். "நீர்மையில் நூற்று வர் வீய ஐவர்க் கருள் செய்து நின்று', என்னும் வாக்கியத்தில், "நீர்மையின்மை யின் நூற்றுவரைக் கொன்றான்; பாண்ட வரை இரக்ஷித்தது நீர்மையாலே" என்பது நன்கு விளங்குகின்றதல்லவா?

இங்ஙனமான ஆழ்வார் திருவாக்கையும் அர்ஜ்ஜுனன் நிலையைக் கூறும் "யேஷா மர்த்தே காங்க்ஷிதம் ந:" என்னும் சுலோ கம் முதலான ஸஞ்ஜயன் வாக்கியங்களை யும் கண்டு, ஸ்ரீராமாநுஜர், "மஹாமநா:", 'பரமகாருணிக:," "தீர்க்கபந்து:," "பரமதார்மிக:" என்னும் அடைமொழி களையிட்டு அர்ஜ்ஜுனன் குணச்சிறப்பைக் கூறியிருக்கிறார் என்பதை நாம் அறிதல் அவசியமாகும்.

இனி, இரண்டாம் அத்தியாயம் ஒன்பதாவது சுலோகத்தின் வியாக்கியானமான பாஷ்யத்தில் அமைந்துள்ள ஸ்ரீராமாநுஜர் திருவாக்கின் கருத்தைக் காட்டுவோம்.

இங்ஙனம் தகுதியற்ற இடத்தில் உண்டான அன்பு அருள் இவற்றினுல் தன் இயல்பை இழந்தவனும், க்ஷத்திரியர்களுக்குச் சிறந்த தருமமாகிய போர் புரிதலை அதருமம் என்று எண்ணினவனும், தருமத்தை உள்ளபடி உணரவேணும் என்னும் விருப்பத்தினுல் சரணம் பற்றினவனுமான அர்ஜ்ஜுனனைக் குறித்து, ஜீவாத்மாவின் உண்மை நிலைமையைப் பற்றிய உணர்வும், பயனில் விருப்பமின்றிச் செய்யும் யுத்தம் பரிசுத்த நிலையில் ஜீவனை அடைவதற்கு உபாயம் என்கிற அறிவும் இன்றி இவன் அறியாமை நீங்காதென்று நினைத்து, பரமபுருஷன் ஸ்ரீ பார்த்தஸாரதியினுல் வேதாந்த சாஸ்திரம் பிரகாசம் செய்யப்பெற்றது. இக்கருத்து, ''**அஸ்த்தாந ஸ்நேஹ...**'' என்னும் ஆளவந்தார் சுலோகத்தில் கூறப்பெற்றுள்ளதாம்—என்பது.

இங்ஙனம், ''**அஸ்த்தாந ஸ்நேஹ...**'' என்னும் சுலோகத்தில், ''தர்மாதர்மபியாகுலம்,' 'தர்மாதர்மதியாகுலம்' என்னும் இரண்டு பாடங்களும் நம் ஸ்வாமி ஸ்ரீராமாநுஜரால் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளவை என்பதையும், ''**அஸ்த்தாந ஸ்நேஹ...**'' என்னும் சுலோகத்திலும், அச்சுலோகத்திற்குக் கருத்துக் கூறும் நம் ஸ்வாமி ஸ்ரீ ராமாநுஜருடைய இருவகையில் உள்ள வியாக்கியானமான திருவாக்குகளிலும் கூறப்பெற்றிருக்கும் அர்ஜ்ஜுனன் நிலையையும் ஒருவாறு கண்டோமல்லவா?

ஆளவந்தார், கீதார்த்த ஸங்க்ரஹம் என்னும் பகவத் கீதையின் ஸாரப் பொருளை விவரிக்கும் தம் நூலில் பதினெட்டு அத்தியாயங்களுக்கும் பதினெட்டு சுலோகங்களை அருளிச் செய்திருக்கிருர். "அஸ்த்தாந ஸ்நேஹ காருண்ய'' என்னும் இந்த சுலோகத்தில் மாத்திரம் முதல் அத்தியாயம் என்பதைக் கூறும் சொல் காணப்பெற்றிலது. இரண்டாம் அத்தியாயம், மூன்ரும் அத்தியாயம் முதலான பதினேழு அத்தியாயங்களின் ஸாரப்பொருள்களைக் குறிக்கும் சுலோகங்களில், "த்விதீயே ஸ்திததீலக்ஷா ப்ரோக்தா'' "த்ருதீயே கர்மகார்யதா'' என்று அந்தந்த அத்தியாயத்தைக் குறிக்கும் சொல் காணப் பெறுகின்றது. இதனுல், முதல் அத்தியாயமும் இரண்டாம் அத்தியாயத்தின் முதல் பத்து சுலோகங்களும் ஸ்ரீபார்த்தஸாரதி உபதேசம் செய்த கீதா சாஸ்திரத்தின் முன்னுரை என்பது தெளிவு. இவ்விஷயத்தை இங்கு நாம் அறிதல் அவசிய மாகும்.

---

## இறைபணியாளர் மாற்றங்கள்

| பெயர் | இருந்த இடம் | மாற்றப்பட்ட இடம் |
| --- | --- | --- |
| திரு. கே. எ. துரைராஜ் | ஸ்ரீ பென்னுரி மாரியம்மன் கோயில், பென்னுரி. | ஸ்ரீ கச்சாலீஸ்வரர் கோயில், அரண்மனைக்காரன் தெரு, சென்னை. |
| ,, கே. நடராஜமாணிக்கம் | ஸ்ரீ விருத்தகிரீசுவரர் கோயில், விருத்தாசலம் | ஸ்ரீ நெமிலி ஆளவந்தார் தர்மம், நெமிலி. |
| ,, பி.ஆர். கோவிந்தராஜுலு | ஸ்ரீ ஆமருவிப்பெருமாள், தேரழுந்தூர். | ஸ்ரீ விருத்தகிரீசுவரர் கோயில், விருத்தாசலம். |

# திருமலையப்பன் திருப்பள்ளி எழுச்சி

வித்துவான் திரு கா. ப. வேங்கடகிருஷ்ணமாசாரியார், பொலாரம், டெக்கான், ஆந்திரா.

(முன் இதழ் தொடர்ச்சி)

முதலெனுஞ் சங்கரன் சதுமுகன் ஆறு
முகத்தவன் இந்திரன் முறைபெறு தேவர்,-
துதியுறு திருக்குளங் குடைந்தன ராடித்
தூய்மையின் அகம்புறம் அணுகினர் வந்தே,
மதியுறை கோபுர வாயிலின் நின்றார்
மறையுரை நாவினர் திருவடி காண்பான்
மதுகரம் முரல்தரு பொழில்வளஞ் சூழும்
மாசுண வெற்பனே எழுந்தரு ளாயே (14)

சுரகணத் தொடுமுனிக் கணந்தொடர்ந் துயர்ந்த
துதிபெறு முன்றிரு மலைமுகட் டிருந்த,-
வரந்தரு கோயிலின் வாயிலில் வந்தே
மாசுணங் கருடனு ராயணன் சிங்கம்,-
புரையறு வேங்கடம் விருடபன் தவத்தாற்
றகுதியார் அஞ்சனை வெற்பெனு மேழு
திருப்பெய ரோதினர் புகழ்ந்தனர் நின்றார்
சேடனும் மலையினய் எழுந்தரு ளாயே. (15)

எண்டிசைக் காவலீ சானனே சுரேசன்
எரியெமன் நிருதிநீர்க் கோன்சுழல் வாயு-
எண்ணுறு மிருநிதிக் குரியவன் முதலோர்
இயம்பிடு முன்னுரை கேட்டிட நின்றார்
உண்ணெகிழ்ந் துரைநெகிழ்ந் திருகரங்குவித்தே.
உரந்தனில் நடமிடுந் திருவினுக் கினியோய்,-
புண்ணியம் புவித்தலத் தெழுதர வந்தோய்
புகலராப் பொருப்பினய் எழுந்தரு ளாயே, (16)

திருவுலாத் திருநடைச் சிறப்பினை யெங்ஙன்
செப்பிட லாகுமோ திருமலைச் செல்வா,-
கருடனும் சீயமும் அரவமுங் கரியும்
கதிநடைப் புரவியும் வெட்கின ஐயா!
வருகுறை மாற்றிடக் கருதின வாயில்
வருவழி நோக்கியே நின்றன வதனல்-
திருவுள மிரங்கியே அருள்செயல் கடனல்
சேடனும் மலையினு யெழுந்தரு ளாயே. (17)

அமரரே யாயினுங் காலம தறிந்தே
யவர்தமைப் பற்றினர் தஞ்செய லாற்றும்,-
இமப்பகை வெண்மதி புவிமகன் மதிச்சேய்
ஈடிலா வாக்பதி யிலக்கிய மேதை,-
தமனியன் சருப்பமோ ரிரண்டெனு மொன்பான்
தனிப்பெருங் கோட்களுந் தகைபெறு மடியார்க்,-
கமைதியில் அடியவ ராயினர் அருள்வாய்
அரவமாம் மலையினு யெழுந்தரு ளாயே. (18)

ஒன்பதென் றுரைத்திடு கோட்களு மீடில்
உரனுடை யாரெனு முண்மைய துண்டே,-
உன்றிரு நாட்டிடை யுளத்தவ ரேனும்
உளவெனுங் கடமைகள் மறந்திடா ரடியார்,-
தன்னுளம் மகிழ்தரச் சேவைகள் செய்துன்
தாட் பொடி தலையினிற் றரித்தனர் நின்றார்,
அன்னவ ருளநிலை யறிந்தனை யருள்வாய்
அரவமாம் மலையினு யெழுந்தரு ளாயே. (19)

தாஞ்செயும் அறத்தினல் நோன்பினற் சாற்றுந்
தவத்தினற் பெருநிலை யடைந்தவ ரெல்லாம்
மாஞ்சபின் சென்றிடு வழிக்கடை நின்றன்
மாபெருங் கோபுர தரிசனம் பெற்றார்
பாஞ்சவர் கிரியினை யணுகினர் நின்றார்
பகர்தரு திருநகர் வாழ்க்கையும் வேண்டார்
ஆஞ்சவ ருளமகிழ் வழியினைக் காண்பாய்
அரவமாம் மலையினு யெழுந்தரு ளாயே (20)

திருமகள் புவிமகள் உளநிறை தலைவா
திருவுளத் தெழுதரு கருணையங் கடலே,-
திருவுடை யமரர்தந் தேவனே செகத்தோர்
சேர்தரு மடைக்கல மூர்த்தியாய் நின்றாய்
அரவுடன் கருடனும் முத்தரும் வந்துன்
அருச்சனை புரிதரு முளத்தினர் நின்றார்,-
விருப்பினர் கிழத்தியர் புடைவர வருவாய்
வேங்கட மலையினு யெழுந்தரு ளாயே. (21)

பதுமநா பபருஷோத் தம வசுதேவ
பால வைகுந்த மாதவ சனர்த்தன கூர்,
சுதரிச னமறுவார் மார்பவுன் சரணந்
தோத்திரஞ் செய்பவர்க் கடைக்கலந் தருவோய்,
மதுவமர் திருத்துள வலங்கலா யென்பார்
மகிழ்வுறு முன்னடி யவர்பலர் வந்தார்,
துதிசெயு மவர்க்கருள் செய்வதுன் கடமை
தொல்லரா மலையினு யெழுந்தரு ளாயே. (22)

மங்கள நிர்மல குணகர மாந்தர்
மனமுறை யொருமுதல் நீயலால் வேறுர்
திங்களுங் கவிழ்முகத் திருவுனை யெழுப்பாள்
திருவுடற் கவினெலாம் விழியுளே தீட்டும்,-
அங்கயற் கண்ணவள் முலைத்தடம் மூழ்கும்
அரவணைப் பிலேயுன் கண்களும் விழியா,
சங்குறை கரத்தினுய் அருள்செயல் கடனுல்
சருப்பமாம் வரையினு யெழுந்தரு ளாயே. (23)

மீனுடன் ஆமையும் பன்றியு மரியும்
விண்ணுயர் வாமனன் பரசுடை யிராமன்,-
பானுவின் குலமகன் அலாயுதன் கண்ணன்
பகர்தரு பிறவிக ளெடுத்தனை பலவே,-
மானவர் குலமுறு நலமெலாம் பெறவே
மாவென வருதலும் வேண்டுவ தாமே.-
தேனவர் அலங்கலாய் திருவருள் புரிவாய்
திகழரா வரையினு யெழுந்தரு ளாயே. (24)

ஏலமி லவங்க கற்பூர குங்குமப்பூ
இயைபுறு சந்தனம் முதலுள யாவும்,-
சாலவும் மணமுறக் கலந்தன ரறிந்தே
தண்மையார் வானிழி கங்கைநீர் கொணர்ந்தார்,-
நூலுறு மார்பினர் பொற்குடம் நிறைத்தே
நுவல்தரு பல்லிய இசையுடன் சிரத்தே,-
காலமாம் மஞ்சன மாடிட வதனுல்
கட்செவி வரையினு யெழுந்தரு ளாயே. (25)

அருணனுந் தோன்றின னலர்ந்தது கமலம்
அறைதரு புள்ளின மெழுந்தன வொலித்தே-
உரைதரு மறையின ருளமகிழ் நிறைவின்
உத்தம வடியவர் நிரைநிரை வந்தார்,-
விரைதரு மலரடி தொழுமுளத் தவரால்
விருப்புட னிசைமறை யுரைபல நவின்ருர்,-
கரையில கருணையங் கடலெனும் முதலே
கட்செவி வரையினு யெழுந்தரு ளாயே. (26)

தண்மதி முகத்தெழில் விழித்தனை காண்பான்
தருபொருள் கண்ணடி திருவிளக் கமுதம்
பண்புறு மட்சதை யாசனம் நன்னீர்
பகர்தரு பத்தொடு மாறெனும் யாவும்
பண்ணுரு மறைநவில் சதுமுகன் விண்ணோர்
பரவிடு மிந்திரன் முதலினோ ரேந்தி
விண்டொடு கோபுர வாயிலில் வந்தார்
வேங்கட வெற்பினு யெழுந்தரு ளாயே (27)

அகல்கிலாள் திருமகள் உறைதரு மார்பா
அருங்குண முளவெலாம் நிறைதருகடலே,-
சகதல வாழ்வெனு மலைகடற் புணையே
சதுமறைத் தலைவனே கலிகெடுத் தருள்வோய்,-
புகல்பெறு மடியவர்க் கருமருந் தனையாய்
பொலிவுறு கருமுகிற் கெழில்மிகு நிறத்தோய்,-
தகவுறும் ஐம்படை விளங்கிடு கரத்தோய்
சருப்பமாம் வரையினுய் எழுந்தரு ளாயே. (28)

திரைமிகு பாற்கடற் பள்ளியாஞ் சேடன்
திருமலை யுருவுடன் வரவவன் முடிமேல்,
வரமெலா மடியவர் வாழ்ந்திட வழங்கி
வன்கொடுங் கலியினைக் களைந்திட நின்ருேன்,-
உரைபெறு பள்ளியெ ழுச்சியைப் படித்தோர்
உறுசெவி பயனுற விருப்புடன் கேட்டோர்
திருமலை யுறைபவன் மலர்மகள் கேள்வன்
திருவருள் பெறுகுவர் முனிவரர் உரையே. (29)

## அவையடக்கம் :

## அறுசீர்க்கழி நெடிலடியாசிரியவிருத்தம்

இன்னல்கள் சூழ்தரவே யிடைநிற்புக்
கெவ்விதமுந் துணையே காணுப்
புன்பிறவிப் புலமையிலேன் புண்ணியர்கள்
புகலிடமாம் அரவ மலைமேல்
நின்றருளும் நேமியனைப் பாடுமிதை
நிறையறிவின் நல்லோர் நாளும்
வன்சொலினு லிகழ்வரோ ? கருங்காக்கை
வார்த்தைக்கும் பொருளே காண்பார்,

## காப்பு

ஆழ்வாரும் முனிவரரும் புலவோரும்
அகங்குழைந்து பாடி நின்ற
ஏழ்மலைமேல் நின்ருனை யெவ்வுலகுங்
காப்பானைப் பள்ளியெழுச்சி
ஏழ்பாரு முய்ந்திடவே பாடிடுவேன்
இன்மலர்மேல் மனையே கொண்டாள்
தாழ்வகல வென்னுளத்தே வந்திருந்து
தகவுடைய சொல்லுந் தந்தாள்!



# குன்றத்தூர்க் கல்வெட்டுக்கள்

டாக்டர் திரு. மா. இராசமாணிக்கனுர், M.A., L.T., M.O.L., Ph.D.

### குன்றத்தூர்

குன்றத்தூர் என்பது சென்னைக்குத் தெற்கில் ஏறத்தாழப் பதினன்கு கல் தொலைவிலுள்ள பழம்பதியாகும். அவ்வூரில் மிகச் சிறிய குன்று ஒன்று இருக்கின்றது. அதனுல் அவ்வூர் குன்றத்தூர் எனப்பட்டது. இன்று குன்றத்தூர், திருநாகேசுவரம் என்னும் இரண்டு பிரிவுகளைப் பெற்றுள்ளது. இவ்விரண்டிற்கும் இடையில் ஒரு நீண்ட பாதை செல்கிறது. அப்பாதையின் இடப்புறத்தில் சில தெருக்கள் இருக்கின்றன. வலப்புறத்தில் வயல்களும் தோட்டங்களும் உள்ளன. அவ்விடம் பழைய காலத்தில் தெருக்களாக இருந்திருக்கலாம். நத்தத்தில் பெரிய புராணத்தை இயற்றிய சேக்கிழார் கோவிலும், ஒரு பெருமாள் (திருவூரகப் பெருமாள்) கோவிலும், இரண்டு சிவன் (கந்தழீசுவரர், வாலீசுவரர்) கோவில்களும், குன்றின்மீது முருகர் கோவிலும் இருக்கின்றன. இவற்றுள் ஒரு சிவன் கோவிலும் பெருமாள் கோவிலும் அழிந்த நிலையில் உள்ளன. இக்கோவில்களிலும், திருநாகேசுவரர்கோவிலிலும்குன்றத்தூரைச் சேர்ந்த மணமை என்பதில் உள்ள நாதாந்தேசுவரர் கோவிலிலும், பல கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவற்றிலுள்ள செய்திகளை நோக்க, சோழர் காலத்துக் குன்றத்தூர் ஒரு பெரிய நகரமாய் இருந்திருத்தல் வேண்டும் என்பது தெரிகிறது.

### திருநாகேசுவரம்

சேக்கிழார் இரண்டாம் குலோத்துங்கன் (கி. பி. 1135-1150) காலத்தவர். அவர் சோழநாட்டுத் திருநாகேசுவரம் என்னும் கோவிற்பெருமானை வழிபட்டவர். அதற்கு அடையாளமாக அக்கோவிலில் சேக்கிழார் திருவுருவச்சிலை உள்ளது. சேக்கிழார் சோழரது அமைச்சர் பதவியிலிருந்து ஓய்வுபெற்ற பின்பு தமது ஊராகிய குன்றத்தூரில் திருநாகேசுவரம் என்னும் கோவிலைக் கட்டினர் என்று சேக்கிழார் புராணம் செப்புகின்றது. இப்புராணச் செய்திக்கு அரண் செய்வது போலவே இவ்வூர்க் கோவில்களிலுள்ள எல்லாக் கல்வெட்டுகளும் இரண்டாம் குலோத்துங்கனுக்குப் பிற்பட்டவையாகவே காணப்படுகின்றன.

குன்றத்தூர்க் கோவில்கள் அனைத்திலும் திருநாகேசுவரம் என்னும் கோவிலே சிறப்புற்று விளங்குகிறது. பிற கோவில்களில் இரண்டு, மூன்று, ஐந்து கல்வெட்டுக்களே இருக்க, இதனில் மட்டும் 45 கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இது ஒன்றே இதன் சிறப்பை நன்கு வலியுறுத்தும். இக்கோவிலைச் சுற்றிலும் அக்காலத்தில் தெருக்கள் இருந்தன. அவற்றில் செங்குந்தர் (நெசவாளர்) இருந்தனர். இன்றும் இக்கோவிலைச் சுற்றிலும் கோவிலுக்கு எதிரிலும் செங்குந்தரே உள்ளனர். இக்கோவிலுள் சேக்கிழார்க்குத் தனிக் கோவில் உண்டு. ஆண்டுதோறும் சேக்கிழார் விழா பத்து நாட்கள் சிறப்பாக நடைபெறுகிறது. இக்கோவிலைப்பற்றிய செப்புப் பட்டயம் ஒன்று இக்கோவில் அதிகாரிகளிடம் இருந்து வருகிறது. இனிக் குன்றத்தூரிலுள்ள கல்வெட்டுக்கள் கூறும் செய்திகளைக் காண்போம்:

**அரசர்கள்**

திரிபுவன சக்கரவர்த்தி குலோத்துங்க சோழ தேவர் iii[1] (கி. பி. 1178-1218)

திரிபுவன சக்கரவர்த்தி இராசராசசோழர் iii (கி. பி. 1216-1246).

திரிபுவன சக்கரவர்த்தி இராசேந்திர சோழ தேவர் iii (கி. பி. 1246-1271).

முதல் ஜடாவர்மன் சுந்தரபாண்டிய தேவர் (1251-1271),

முதல் மாறவர்மன் குலசேகர தேவர்[2] (கி. பி. 1268-1311).

**சிற்றரசர்கள்**

கோப்பெருஞ் சிங்கதேவன்—மூன்ரும் இராசராசன் காலம்

விஜயகண்ட கோபாலதேவன்—மூன்ரும் இராசேந்திரன் காலம்

வீரகண்ட கோபால தேவன்

இராஜ நாராயண சம்புவராயர்

வென்று மண்கொண்ட சம்புவராயர்

இவர்கள் சோழர் வீழ்ச்சிக் காலத்திலும், அதன் பின்னரும் நாட்டை விரிவாக்கிச் சிறிது காலம் ஆண்டவர்கள்.[3]

மாலிக்காபூர் படையெடுப்புக்குப் பின்னர் விசயநகரப் பேரரசு ஏற்பட்டது. அது தென்னிந்தியாவைக்கைப்பற்ற வீரகம்பண முடையார் என்பவரை அனுப்பியது. அவர் பதினன்காம் நூற்ருண்டின் இடைப் பகுதியில் வாழ்ந்தவர். பின்பு நாடாண்ட முதல் ஹரிஹரராயர், இரண்டாம் தேவ மகாராயர், (1422-1432), மல்லிகார்ச்சுன மகாராயர் (1432-1450), கிருஷ்ணதேவ ராயர் (1509-15-29), சீரங்க தேவராயர் (1572-1585), ஔரங்கசீப் (கி. பி. 1699) என்பவர் காலக் கல்வெட்டுக்கள் இடம்பெற் றுள்ளன. அரியண உடையார் என்னும் சிற்றரசர் கல்வெட்டு ஒன்றும் சொக்கர் பூபன் என்பவர் கல்வெட்டு ஒன்றும் காணப் படுகின்றன. சொக்கர்பூபன் என்பது மதுரையை ஆண்ட சொக்கநாத நாயக்க ரைக் (கி. பி. 1669-1682) குறிக்கலாம் என்று ஆராய்ச்சி அறிஞர் கருதுகின்ற னர்.[4]

**திருப்பணி செய்தவர்**

பேரரசர், சிற்றரசர், அரசாங்க அலு வலர், வணிகர், தேவரடியார், நெசவாளர் முதலிய பலரும் சமயத் திருப்பணியில் ஈடு பட்டிருந்தனர் என்பது கல்வெட்டுக்களால் அறியப்படும் செய்தியாகும்.

**விளக்கெரிக்கத் தானம்**

கோவிலில் விளக்கெரித்தல் மிகச் சிறந்த திருப்பணியாகக் கருதப்பட்டது. அதனுல் பல கல்வெட்டுக்கள் விளக்குத் தானத்தைக் குறிக்கின்றன. குன்றத்தூர்க் கல்வெட்டுக் கள் ஐம்பத்தைந்தில் இருபத்தாறு கல்வெட் டுக்கள் விளக்குத் தானத்தைக் குறிக்கின் றன.

அக்காலக் கோவில்களில் சாதாரண விளக்கு, நந்தா விளக்கு, சந்தி விளக்கு எனப் பலவகை விளக்குகள் எரிக்கப்பட் டன. (1) சாதாரண விளக்கு என்பது பூசை நேரங்களில் மட்டும் ஏற்றப்படும் விளக்கு எனக் கொள்ளவும். (2) **நந்தா விளக்கு** என்பது எப்பொழுதும் எரிந்து கொண்டிருக்கும் விளக்காகும். (3) சந்தி விளக்கு என்பது காலை, மாலைச் சந்திகளில் மட்டும் எரிக்கப்படுவது. இம்மூவகை

1. மூன்ரும் குலோத்துங்கனுக்கு வீரராசேந் திர சோழதேவன் என்றபெயரும் உண்டு. இப்பெயர் 3 கல்வெட்டுக்களில் வருகின்றது— K. A. N. Sastry's Cholas (2nd ed.) p. 39.

2. இவன் காலத்திற்ருன் மார்க்கோபோலோ பாண்டிய நாட்டுக்கு வந்து இவனது ஆட்சியைப் பாராட்டி எழுதியுள்ளான் — பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு பக். 141.

3. A. R. E. 1910, p. 108.

4. 185 of 1929—'30

விளக்குகளும் குன்றத்தூர்க் கோவில்களில் எரிக்கப்பட்டன.

விளக்கு எரிக்கப் **பணம், பசுக்கள், ஆடுகள்** கொடுக்கப்பட்டன. சிறிய கோவில்களில் இருந்த சிவப்பிராமணரே அறத்தை ஏற்றுக்கொண்டு நிகழ்த்தி வந்தனர். திருநாகேசுவரம் கோவில் **ஊரவையார்** ஆட்சியிலும் **திருவுண்ணாழிகைச் சபையார்** ஆட்சியிலும் இருந்தது. கோவில் தொடர்பான நிலங்களை விற்றல், அவற்றின் வருவாயைக் கவனித்தல் முதலிய வேலைகளை **ஊரவையார்** கவனித்தனர்.[5] ஆதலால் விளக்கெரிக்கக் கொடுக்கப்பட்ட பசுக்களையும் ஆடுகளையும் பணத்தையும் திருவுண்ணாழிகைச் சபையார்[6] ஏற்று விளக்கெரிக்கும் திருப்பணியை நடத்தி வந்தனர்.[7]

## நிலதானம்

கோவில் பூசைக்கும், குறிப்பிட்ட விழாக்கள் நடத்தவும் சிலர் கோவிலில் எழுந்தருளுவித்த கடவுளர் பூசைக்கும் நிலங்கள் தானமாகக் கொடுக்கப்பட்டன. இத்துறையில் அரசர் முதல் ஆண்டி ஈருக அனைவரும் நிலதானம் செய்தனர். இந்நில தானத்தைப் பற்றிப் பல கல்வெட்டுக்கள் தோன்றியுள்ளன.[8]

## கோவில் திருப்பணிகள்

திருநாகேசுவரம் கோவிலில் கம்பவாண நாச்சியார் திருமேனி, தட்சிணாமூர்த்தி திருமேனி, சொக்க நாயனார் திருமேனி வைக்கப்பட்டன.[9] திருவூரகப் பெருமாள் கோவிலில் கோபுரமும் மகாமண்டபமும் கி. பி. 1701-இல் புதுப்பிக்கப்பட்டன.[10] கி. பி. 1723-இல் மலைமீதுள்ள வேலவர் கோவிலில் கோபுரம் கட்டப்பட்டது. பல திருமேனிகள் அக்கோவிலில் வைக்கப்பட்டன.[11] ஒரு பொன் பட்டம் கோவிலுக்குக் கொடுக்கப்பட்டது.[12] சில நிலங்களின் வரிகள் அரசர் கட்டளைப்படி, திங்கள் தோறும் ரேவதி நாளில் சிறப்புப் பூசைக்காகக் கோவிலுக்கு விடப்பட்டன.[13] கோவில் திருமடவளாகத்தில் வாழ்ந்த நெசவாளர் தறிவரியை அதிகாரிகள் விருப்பப்படி கோவிலுக்குக் கொடுத்தனர்.[14]

## பூசை விழா முதலியன

கோவிலில் விடியற்காலைப் பூசை (திருவனந்தல்), நள்ளிரவுப் பூசை முதலிய நாள் பூசைகள் நடந்தன. திங்கள்தோறும் ரேவதி நாளில் சிறப்புப் பூசை நடைபெற்றது. சித்திரை வசந்தவிழா ஆண்டு தோறும் சிறப்பாக நடந்தேறியது. இவற்றிற்காகச் சிலர் நிலதானமும் பணதானமும் செய்தனர்.[15]

## சுவாமி-அம்மன் பெயர்கள்

திருவூரகப் பெருமாள் கோவில், ''இளந்தத்த விண்ணகர்'' எனப் பெயர் பெற்றிருந்தது.[16] திருநாகேசுவரம் என்பது கோவிலின் பெயர். அப்பெயரே இன்று ஊரின் ஒரு பகுதிக்குப் பெயராய் வழங்குகிறது. அக்கோவில் சிவனது பெயர் 'திருநாகேசுவரமுடையார்' என்பது. அதிலுள்ள மற்

5. 187, 191, 224 of 1929—'30

6. திருவுள்+நாழிகை+சபையார், திருவுள்—கருவறை, கருப்பக் கிருகம். நாழிகை—24 நிமிட நேரம். அதாவது, ஒரு நாளிற் குறித்த நேரம். குறித்த நேரத்தில் பூசை, விழா முதலியன நிகழ்த்தும் சபையார் திருவுண்ணாழிகைச் சபையார் எனப்பட்டனர் என்று கொள்ளலாம்.

7. 196, 202, 203, 205, 210, 212—15, 218—20 and 229 of 1929—30

8, 187—9, 191, 194—5 198, 204, 206, 208—9, 224—7.

9. 194. 196, 221 of 1922—'30

10. 181 of 1929—'30

11. 185 of 1929—'30

12. 216 of 1929—'30

13. 200 of 1929—'30

14. 190 of 1929—'30

15. 191, 198, 200, 207, & 190 of 1929—'30

16. 177 of 1929—'30

ஒருரு சுவாமியின் பெயர் 'பிறையணி வாள் நுதல் ஈசுவரம் உடைய நாயனர்,'[17] (பெருங்கோவிலில்உள்ள சிறுகோவில் சிவ லிங்கத்தின் பெயர்).

## அரசியல் அதிகாரிகள்

மல்லிகார்ச்சுன தேவர் காலத்தில் குன்றத்தூரில் வரி வாங்கியவன் மகாமண்டலேசுவரன் சாளுவ நரசிங்கதேவன் என்பவன். குன்றத்தூர் நாட்டு மூவேந்த வேளான் என்பவன் ஒருவன். பெரும் பாணன் குன்றப் பெருமாள் என்ற சோழ கேரளன் ஒருவன். பஞ்சநதிவாணன் அருணகிரிப் பெருமாள் நீலகங்க அரையன் என்பவன் ஒருவன்.[18]

## பொதுச் செய்திகள்

குன்றத்தூர் ஒரு நாட்டின் தலைநகர். அந்நாடு குன்றத்தூர் நாடு எனப்பட்டது. அந்நாட்டுக்குரிய மருத்துவன் ஒருவன் மருத்துவக் காணி என்னும் பெயரில் நில மானியம் பெற்று அநுபவித்து வந்தான். அவன் பெயர் சவர்ண காசியபன் குலோத் துங்க சோழ மங்கலாதிராசன் சீராள தேவன் என்பது.[19] 'சவர்ண' என்பது கால்நடைகளைப் போற்றுதல், சோதிடம் பார்த்தல், மருத்துவம் பார்த்தல் முதலிய பல தொழில்களைச் செய்பவனுக்குப் பெய ராய் வழங்கியது.[20] ஒரு கிராமத் தலைவ னிடம் வேலை செய்து வந்த ஒருவன் கோவிலுக்குரிய வரிகளைச் செலுத்தாமல் ஓடிவிட்டான். அவனுடைய நிலங்கள் திருநாமத்துக்காணி என்னும் பெயரில் விற்கப்பட்டு, வந்தபணம் கோவிலில் சேர்க் கப்பட்டது.[21]

வீரராசேந்திரன் என்ற மூன்றும் குலோத்துங்கன் காலத்தில் உழந்தை உடையான் வடுகநாதன் என்பவன் குன்றத்தூரை ஜீவிதமாக வைத்திருந்தான்.[22] தாயார் நலனுக்காகப் பிள்ளைகள் கோவிலில் விளக்கெரித்தனர். குன்றத்தூரில் மல்லி கார்ச்சுன தேவர் காலத்தில் சில கைக் கோள முதலிகள் குடியேறினர். வெள்ளம் தாங்கினர் என்பது ஒருவர் பெயர். அவர் நீர்வெள்ளத்தைத் தடுத்தனரோ அல்லது படை வெள்ளத்தைத் தடுத்தனரோ, தெரிய வில்லை. அவர் மூன்றும் இராசராசதேவன் காலத்தில் வாழ்ந்தவர். குன்றத்தூரில் நெசவாளன் ஒருவன் கோவிலில் சொக்க நாதர் சிலையை வைத்தான். கோவிலார் அவனுக்குப் பரிவட்டமும் ஒருமனையும் கொடுத்தனர். அந்த மனையில் இடம் பெறும் ஒவ்வொரு தறிக்கும் நான்கு பணம் வீதம் அவன் கோவிலுக்கு வரி செலுத்த வேண்டும் என்பது விதிக்கப்பட்டது.[23]

மூன்றும் குலோத்துங்கன் காலத்தில் 'ஊற்றபாக்கிழான் பொன்னுண்டி' என்பது ஒருவன் பெயர். கிழான் என்னும் சங்க காலப் பெயர் மூன்றும் குலோத்துங்கன் காலத்திலும் வழக்கில் இருந்தது என்பது இக்கல்வெட்டால் அறியப்படுகிறது. அக் கால நீட்டலளவைக்கோல்கள், 'கண்டர் கண்டன்', 'அமைத்த நாராயணன்,' நில அளவுகோல் [24] என்று பெயர் பெற்றன. சீரங்கதேவ மகாராயர் காலத்தில் (கி. பி. 1579-இல்) கடல்மல்லைத் தலசயனம் பெரு மாள் கோவிலுக்குக் குன்றத்தூரில் நிலம் விடப்பட்டது. [25]

குன்றத்தூரை அடுத்துள்ள ஏரியின் பழைய பெயர் பெரும்பாக்க ஏரி என்பது. அது இப்பொழுது (செம்)பரம்பாக்கம் ஏரி என மாறி வழங்கி வருகிறது. அக்காலத்

17. 179 & 189 of 1929—'30
18. 204, 209, 216, 224 of 1929 —'30
19. 184 of 1929—'30
20. A.R.E. 1929—30' 181
21. 192 of 1929—'30
22. 200. of 1929—'30 இது தெளிவாக விளங்கவில்லை. ஊரையே ஜீவித மாகக் கொண்டிருந்தான் என்பது ஆராயத்தகுவது.
23. 203: 207, 212, 216 & 221 of 1929—'30
24. 228 of 1929—'30
25. 255 of 1929—'30

தில் அவ்வேரியில் பெரிய மதகும் வயல்களுக்கு நீரைக் கொண்டு செல்லப் பல கால்வாய்களும் இருந்தன. [26]

திருநாகேசுவரம் கோவில் தேவரடியார் விளக்குகள் எரிக்கப் பணம் தந்தனர். அவர்களுள் ஒருத்தி பெருமாள் கோவிலுக்கும் தானம் செய்தாள். [27] சேக்கிழான் திருவூரகப் பெருமாள், சேக்கிழான் புவனப் பெருமாள், சேக்கிழான் ஆடவல்லான் என மூவர் அறப்பணி செய்துள்ளனர். [28] இவர்கள் பெரியபுராணம் பாடிய சேக்கிழார் மரபினராவர். திருவூரகப்பெருமாள் கோவிலில் கோவிற் பணிகட்காக நம்பிமார் நியமனம் பெற்றனர். [29]

### ஊரும் நாடும்

கல்வெட்டுக்களில் அக்கால ஊர்களும் நாடுகளும் குறிக்கப்பட்டுள்ளன. அவை பின்வருமாறு:— (1) ஜயங்கொண்ட சோழ மண்டலத்துப் புலியூர்க் கோட்டத்துக் குன்றத்தூர் நாட்டுக் குன்றத்தூர் (விஜய கண்ட கோபால தேவர் காலம்). [30] (2) ஜெயங்கொண்ட சோழ மண்டலத்துச் சந்திரகிரி ராச்சியத்துப் புலியூர்க்கோட்டத்துக் குலோத்துங்க சோழ வளநாட்டுக் குன்றத்தூர், (கிருஷ்ணதேவராயர் காலம்). (3) ஜெயங்கொண்ட சோழ மண்டலத்துக் குன்றவர்த்தனக் கோட்டத்து நாராயணப் புறப்பற்றைச் சேர்ந்த இல்லத்தூர் நாட்டு ஆர்க்காடு. [32] 'ஏழாயிரம் பண்ணை' என்பது போல, 'ஆறுயிர வேலிப்பற்று' என்பது ஊர்ப் பெயர். [33] ஜெயங்கொண்ட சோழ மண்டலத்துப் பேரூர் நாட்டு நெற்குன்றம். ஊற்றுக் காட்டுக்கோட்டத்து மருதம் என்ற ஊர். (3) ஜெயங்கொண்ட சோழ மண்டலத்துப் படைவீட்டு இராச்சியத்து ஆமூர்க் கோட்டத்து முகந்தூர் நாட்டுத் திருக்கழுக்குன்றப் பற்று—பெரும்பாக்கச் சீர்மையைச் சேர்ந்த குன்றத்தூர் (சீரங்க தேவர் காலம் கி. பி. 1579) [34] ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து ஆமூர்க்கோட்டத்து ஆமூர் நாட்டு ஜனநாதநல்லூர் என்ற மணமை. [35]

### மக்கள் பெயர்கள்

கூடல்நாயனுர் முதலியார் சொக்கப்பர், தழுவக்குழைந்தான் பட்டன், இளங்காவிரி தென்ன விழுப்பரையன் பெருமாள் பிள்ளை, சீராளதேவன், புரிசைகிழான் திருவாலீசுவரமுடையான், திருக் காளத்தியுடையான், பிறையணிவாள் நுதலார் பொன்னுழ்வார் (பெண்மணியார் பெயர்), முத்திக்கு நாயகன் தென்னவராயன், திருவொற்றியூர் உடையார் காக்கு நாயகர், (வாணிக நகரத்தாறுன) நெற்குடி சூரிய தேவன், வீரமிண்டத்தூசி என்ற கண்ணப்பன் பஞ்சநதி கமலவாணன், அருளாளன் தேவப்பெருமாள், குலோத்துங்க சோழக் கண்ணப்பன் கம்பவாணன், தீராவினைதீர்த்தான், கைகயராயன், வடுகநாதன், வடுகப்பிள்ளை,

26. 191, 194, 198, & 225 of 1929—'30

27. 213,—5, 219 & 179 of 1929—'30

28. 208, 218 & 230 of 1929—'30

29. 178 of 1929—'30. நம்பி என்பது கோவிலில் பணி புரிந்த பிராமண இளைஞர்க்கு வழங்கிவந்த பெயராகலாம். நம்பி ஆரூரர் திருநாவலூர் அர்ச்சகர் மகன்; திருவாரூர் அர்ச்சகர் பெயரர் என்ன இங்கு நினைக்கத்தகும்.

30. 177 of 1929—'30

31. 182 of 1929—'30. ஆட்சி மாறுகையில் நாட்டுப் பெயர்களிலும் மாறுதல் உண்டாதலைக் காண்க.

32. 193 of 1929—'33

33. 197 of 1929—'30

34. 255 of 1929—'30. உள்நாட்டுப் பெயர்கள் மாறியிருத்தல் காண்க.

35. 256 of 1929—'30

# சேக்கிழாரும் சைவ சித்தாந்தமும்

முன்னுரை:

சேக்கிழார் சுவாமிகள் நமது செந்தமிழ் நாட்டின் சிறந்த "தேசீய கவிஞர்" (National poet). சேக்கிழார் இயற்றியருளிய திருத்தொண்டர் புராணம் நம் நாட்டின் ஒப்புயர்வற்ற "தேசீய காவியம்" (National Epic).

ஆங்கிலேயர்கள் தமது நாட்டின் அரும் பெருங் கவிஞர் ஆகிய ஷேக்ஸ்பியர் என்பவரைக் குறித்துப் பல்வேறு கோணங்களில் வெவ்வேறு வகைகளில் விதவிதமாக ஆராய்ந்து பெருமிதங் கொண்டு மகிழ்கின்றனர். ஷேக்ஸ்பியர் கடவுள் நம்பிக்கை யுடையவரா? இல்லாதவரா? அவர் கத்தோலிக்கரா? பிராடஸ்டண்ட் பிரிவினரா? ஃபாஸிஸ்டா அன்றி ஜேகோபினா? அவர் எத்தகைய அரசியற் கொள்கை யுடையவர்? இந்நாளில் அவர் இருந்திருப்பின், நாடு மொழி இனம் கலை நாகரிகம் அரசியல் அருளியல் முதலிய ஒவ்வொன்றனையும் குறித்து, எவ்வெவ்வாறு அவர் கருத்துக்கொண்டிருப்பார்? என்றெல்லாம் எண்ணி எண்ணிப் பார்த்து, எத்தனையோ பலப்பல புதுப்புது ஆராய்ச்சி நூல்களை மேலை நாட்டார் எழுதி வெளியிட்டு வருகின்றனர்.*

அதுபோல, நாமும் நமது அருமைச் சேக்கிழார் பெருமானைக் குறித்துப் பலப்பல துறைகளில் ஆராய்ந்தறிய முற்படுதல், நம்மனோர்க்குப் பெரு நலம் பயக்கும்.

*"Another aspect of the Wonder has been the annexation of Shakespeare as their particular prophet by almost every set of worshippers, philosophers, and politicians. Saint and devil have vied in quoting Shakespeare to their purpose. He can be toasted at Birthday junketings and on 'Immortal memory' occasions with equally sincere fervour by Catholics, Protestants, and Agnostics, by Optimists and Pessimists, by Aristocrats and Levellers, by the most chaste of pietists and by those who inwardly agree with Ally Sloper's Dook Snook that a 'dirty mind is a continual feast'. By the method of your citation you can make him Fascist or Jacobin with ease...... In any fair-sized library 'Shakespeareana' make up an entire department, no mere shelf or case".

— Ivor Brown

கூடல் கிழான் கருணாகரத் தேவன் திருநாகேசுவரமுடையான் (என்ற) குன்றத்தூர் நாட்டு மூவேந்த வேளான், ஆதிநாயகன், அங்கப் பிள்ளை, திருவுண்ணாழிகை நங்கை, உத்தரமேரூர் நங்கை, கண்ணுடை நாய்ச்சியார், நாச்சி என்ற நாற்பத்தெண்ணாயிர மாணிக்கம், நாற்பத்தெண்ணாயிரச் சோழ குமாரன். 36 ஐந்நூறு என்றாற்போல, ஒரு கூட்டத்தின் பெயராகும். இக்கூட்டத்தினர் சிதம்பரம், திருவானைக்கா, திருப்பூவணம் போன்ற இடங்களில் இருந்து சிவத்தொண்டு செய்தனர் என்று தக்கயாகப்பரணி (கண்ணி 219; உரை) கூறுகின்றது. ஒருநடனமகள் 'நாற்பத்தெண்ணாயிர மாணிக்கம், என்றபெயருடன் இருந்தாள் என்று கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. (202, 214, of 1929—'30). இந்த நாற்பத்தெண்ணாயிரம் தொண்டரிடம் அவளோ அவள் பெற்றோரோ கொண்டிருந்த மதிப்பு இதனால் தெரிகிறதன்றோ! இவ்வாறே இக்கோவில் கல்வெட்டில் காணப்படும் சோழகுமாரனுடைய பெற்றோர் நாற்பத்தெண்ணாயிரவரிடம் கொண்டிருந்த மதிப்பு இப்பெயரால் நன்கு தெரிகிறது.

36 மதுரையில் நாற்பத்தெண்ணாயிரம் சிவனடியார் இருந்து சிவத்தொண்டு செய்துவந்தனர், என்று நம்பி திருவிளையாடல் கூறி, அப்பெருமக்கட்கு வணக்கம் செலுத்துகிறது. 'நாற்பத்தெண்ணாயிரம் என்பது, தில்லை மூவாயிரம், திருப்பெருந்துறை முந்நூறு, திருவாக்கூர்—ஆயிரம், திருவீழிமிழலை

அவற்றுள் "சேக்கிழாரும் சைவ சித்தாந்தமும்" என்னும் தலைப்பும் ஒன்றாகும்.

இஃது ஒருவகையிற் புதுமையும், மிகவும் கடினமும், அருமையும் வாய்ந்த பொருளாகும். சித்தாந்த நூல்களையும், பெரிய புராணம் முழுவதனையும், பலகால் கற்று ஆராய்ந்துணர்ந்து பண்பட்ட, சிறந்த அறிஞர் பெருமக்களே, இவ்வரிய இனிய பொருள் பற்றிப் பேசுதற்கு மிகவும் உரிமையும் தகுதியும் உடையவராவர்.

## சேக்கிழாரும் சித்தாந்த நூல்களும்:

சேக்கிழார் பெருமான் திருமுறையாசிரியர்கள் பலருள் ஒருவர். சைவ சித்தாந்தம் என்பது, மெய்கண்டார் முதலிய சந்தானாசிரியர்களால் விளக்கப் பெற்ற சிவநெறிக் கொள்கை. திருமுறைகள் பன்னிரண்டு என்றும், சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கு என்றும், தனித்தனியாகவே பிரித்துக் குறிப்பிடப் பெறுகின்றன. சேக்கிழார் பெருமான் சிவனடியார்களாகிய அறுபான் மும்மை நாயன்மார்களின் வரலாறுகளைப் பாடியவர். அவர் தமது திருத்தொண்டர் புராணத்துள், சைவ சித்தாந்தக் கொள்கைகளை நிரலே கிளந்தெடுத்துக் கொண்டு வரையறை செய்து, வகுத்துரைத்து விளக்கத் தலைப்பட்டிலர்.

'சைவ சித்தாந்தம்' என்னும் பெயரால் சிவநெறிக் கொள்கைகளை வரையறை செய்து, அறிவியல் முறைப்படி தடைவிடைகள் அமையவும், தருக்க நெறிமுறைகளுக்கு ஏற்பவும், செவ்விதின் அமைத்துச் சிறப்புற விளக்கி யருளிய பெருமக்கள் ஆசிரியர் மெய்கண்டார், அருள்நந்தி சிவாசாரியார், உமாபதி சிவனார் ஆகியோர்களே யாவர். சேக்கிழார் பெருமான் காலத்தில் சிவஞான போதம், சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம் முதலிய சித்தாந்த சாத்திரங்களுள் எதுவும் தோன்றிற்றிலது.

அவைகளெல்லாம் சேக்கிழார் பெருமான் காலத்திற்குச் சிறிது பின்னரே தோன்றலாயின. இந்நிலையில், சேக்கிழார் பெருமான் தமது நூலில் ஏதேனும் சைவ சித்தாந்தக் கருத்தினையோ, அல்லது அதற்குரிய குறியீட்டுச் சொற்களையோ சொற்றொடர்களையோ (Technical terms) வழங்கி யிருக்கின்றனரா? என ஆராய்ந்தறிய முற்படுதல், நம் அறிவிற்குப் பெருவிருந்தாக அமையும்.

## சித்தாந்தக் குறியீடுகள்:

சேக்கிழார் சுவாமிகள் "சித்தாந்த சாத்திரங்கள்" தோன்றுதற்கு முன்னரே வாழ்ந்திருந்தவராயினும், பதி பசு பாசம் இருவினை மும்மலம் பெத்தம் முத்தி சரியை கிரியை யோகம் ஞானம் இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் தீக்கை சிவலிங்கம் திருநீறு திருவைந்தெழுத்து என்பன போன்ற பல சைவ சித்தாந்தக் குறியீட்டுச் சொற்களையும், அவற்றோடு தொடர்புடைய பலவகைக் கருத்துக்களையும், ஆங்காங்கே தமது நூலில் ஏற்ற பெற்றி குறிப்பிட்டுச் செல்கின்றார். அவற்றுள் ஒரு சில முதன்மையான செய்யுட்களை மட்டும் ஈண்டுக் காண்போம்:

> பொடியார்க்கும் திருமேனிப்
> புனிதற்குப் புவனங்கள்
> முடிவாக்கும் துயர்நீங்க
> முன்னைவிடம் அமுதானால்,
> படியார்க்கும் அறிவரிய
> பசுபதியார் தம்முடைய
> அடியார்க்கு நஞ்சமுதம்
> ஆவதுதான் அற்புதமோ? —1375

> இருவினைப் பாசம்,மும்
> மலக்கல் ஆர்த்தலின்
> வருபவக் கடலில்வீழ்
> மாக்கள் ஏறிட
> அருளும்மெய் அஞ்செழுத்து
> அரசை இக்கடல்
> ஒருகல்மேல் ஏற்றிடல்
> உரைக்க வேண்டுமோ? —1399

"பந்தம் வீடு தரும்பரமன் கழல்"—300

எனவரும் பாடல்களில் பதி பசு பாசம் பசுபதி இருவினை மும்மலம் பந்தம் (பெத்தம்) வீடு(முத்தி) என்னும் சைவ சித்தாந்தக் குறியீட்டுச் சொற்கள் பயின்று வந்திருத்தல் காணலாம்.

"நிலவியஇரு வினைவலையிடை
நிலைசுழல்பவர் நெறிசேர்
புலனுறுமனன் இடைதடைசெய்த
பொறிகளின்அள வுளவே" —734

"நிலைப்பட மெய்யுணர்வு
நேர்பட்ட போதில்
அலைப்பட்ட ஆர்வமுதற்
குற்றம்போல் ஆயினர்" —634

"போதநிலை முடிந்தவழிப்
புக்குஒன்றி உடன்ஆனர்" —1253

"ஞானம்முதல் நான்கும்மலர்
நற்றிருமந் திரமாலை" —3594

"நலஞ்சிறந்த ஞானயோகக்
கிரியா சரியையெலாம்
மலர்ந்தமொழித் திருமூலதேவர்"
—3596

எனவரும் பாடல்களில் இருவினை பொறி புலன் மனம் மெய்யுணர்வுநேர்படுதல் ஒன்றிஉடனாதல் ஞானம் யோகம் கிரியை சரியை என்பனவற்றைப் பற்றிச் சேக்கிழார் சுவாமிகள் குறிப்பிட்டுச் சொல்லியுள்ளார்.

"நாணனும் அன்பும் முன்பு
நளிர்வரை ஏறத் தாமும்
பேணுதத் துவங்கள் என்னும்
பெருகுசோ பானம் ஏறி
ஆணையாம் சிவத்தைச் சார
அணைபவர் போல ஐயர்
நீள்நிலை மலையை ஏறி
நேர்படச் செல்லும் போதில்" -752

"முன்னைவல் வினையும் நீங்கி
முதல்வனை அறியும் தன்மை
துன்னினான் வினைகள் ஒத்துத்
துலைஎன நிற்ற லாலே" —2722

"இந்தவெப் படைய நீங்க
எனக்கருள் புரிவீர் என்று
சிந்தையால் தொழுது சொன்னான்
செல்கதிக்கு அணியன் ஆனான்"
—2672

என்னும் பாடலில், தத்துவங்கள் சத்தி சிவம் இருவினையொப்பு மலபரிபாகம் ஆகியவை பற்றிய சைவசித்தாந்த நுண்பொருட் கருத்துக்கள் தக்காங்கு அமைந்திருக்கும் திறம், அறிந்தின்புறத் தக்கது.

"திங்கள்சேர் சடையார் தம்மைச்
சென்றவர் காணு முன்னே
அங்கணர் கருணை கூர்ந்த
அருட்டிரு நோக்கம் எய்தத்
தங்கிய பவத்தின் முன்னைச்
சார்புவிட் டகல நீங்கப்
பொங்கிய ஒளியின் நீழற்
பொருவில்அன்பு உருவம் ஆனார்"
—753

எனச் சத்திநிபாதத் தன்மை பற்றியும்,

"காணாத அருவினுக்கும்
உருவினுக்கும் காரணமாய்
நீள்நாகம் அணிந்தார்க்கு
நிகழ்குறியாம் சிவலிங்கம்" -3648

எனச் சிவலிங்கத்தின் சிறப்புப் பற்றியும்,

"தோற்றும் மன்னுயிர்
கட்கெலாம் தூய்மையே
சாற்றும் இன்பமும்
தண்மையும் தந்துபோய்
ஆற்ற அண்டம்
எலாம்பரந்து அண்ணல்வெண்
நீற்றின் பேரொளி
போன்றது நீள்நிலா" —308

எனத் திருநீற்றினைப் பற்றியும்,

"பஞ்சின் மெல்லடிப்
பாவையர் உள்ளமும்
வஞ்ச மாக்கள்தம்
வல்வினை யும்பரன்
அஞ்செ ழுத்தும்
உணரா அறிவிலோர்
நெஞ்சும் என்ன
இருண்டது நீண்டவான்" —305

"ஆதி மந்திரம் அஞ்செழுத்து
ஓதுவார் நோக்கும்
மாதி ரத்தினும் மற்றை
மந்திரவிதி வருமே?" —2601

எனத் திருவைந்தெழுத்தினைப் பற்றியும், ஆங்காங்கே குறிப்பிட்டுச் செல்லும் பெரிய புராணப் பாடல்கள் பலவற்றில், சேக்கிழார் சுவாமிகள் சைவ சித்தாந்த சாத்திரங்கள் கூறும் செம்பொருட் கருத்துக்கள் பல வற்றிற்கும், அடிப்படை யமைத்து வைத்திருத்தல் அறிந்து மகிழ்தற் குரியது.

"ஓதிய எழுத்தாம் அஞ்சும்
உறுபிணி வரத்தாம் அஞ்சும்"—84

எனத் திருவைந் தெழுத்தின் சிறப்பையும் பயனையும் விளக்கும் நிலையிற் போதரும் அரிய இனிய அழகிய பெரிய புராண வரி ஒன்றே, அறிஞர்களுக் கெல்லாம் ஆராப் பெருவிருந்தாக அமையும் அன்றோ? கற்பார் நெஞ்சம் களிதுளும்பச் செய்யும் இத்தகைய பொருள் பொதித்த சிறந்த வரிகள் பெரிதும் போற்றற் பாலனவாம். ("A single beautiful line has wrought the world more good than all the masterpieces of mechanism" —Anatole France)

## சேக்கிழாரும் உமாபதிசிவமும்:

இங்ஙனம் சேக்கிழார் பெருமான் தமது பாடல்களிற் குறிப்பிட்டுள்ள சைவ சித்தாந்தக்குறியீட்டுச்சொற்கள்சொற்றொடர்கள் கருத்துக்கள் என்பனவற்றைமட்டுமேயன்றி, இனி வேறொரு வகையிலும் இப்பொருளை ஆராயலாம். சேக்கிழாரின் பெரிய புராண வரலாறுகள் சைவ சித்தாந்த நூல்களில் எவ்வகையிலேனும் இடம் பெற்றுள்ளனவா? சைவ சித்தாந்த சாத்திரங்களை அருளிச் செய்த சந்தான ஆசிரியர்கள் சேக்கிழாரின் பெரிய புராணத்தின் பால் ஈடுபாடு கொண்டு மதித்துப் போற்றினர் என்பதற்கு ஏதேனும் சான்றுகள் உண்டா? என்பன போன்ற செய்திகளை ஆராய்தலும், ஈண்டுப் பொருந்துவதாகும்.

சேக்கிழார் பெருமான் 'அநபாயன்' என்னும் சிறப்புப் பெயர் கொண்ட இரண்டாம் குலோத்துங்கன் (கி. பி. 1123—1148) காலத்தவர் என்பது, பெரும்பாலான ஆராய்ச்சியாளர்களின் துணிபு. சந்தான ஆசிரியர்களின் காலம் இதற்கு முன்னையதோ? பின்னையதோ? என்பதைத் தெரிந்து கொள்ளுதல் ஈண்டைக்கு இன்றியமையாத தாகும். சைவ சித்தாந்த சந்தான ஆசிரியர்களின் வரிசையில் நான்காமவராக விளங்குபவர் உமாபதி சிவாசாரியர். அவர் வாழ்ந்தருளிய காலம் கி. பி. 1313 ஆம் ஆண்டுக்குச் சிறிது முன்னும் பின்னும் ஆகும் என்பது, அவர் இயற்றியருளிய 'சங்கற்ப நிராகரணம்' என்னும் நூலின்கண்,

"ஏழஞ் சிருநூறு எடுத்த ஆயிரம்
வாழுநற் சகனம் மருவா நிற்ப"

எனப் போதரும் வரிகளாற் பெறப்படுகின்றது. ஆதலின் அவர் சேக்கிழாரின் காலத்திற்குப் பெரிதும் பிற்பட்டவர் என்பது தேற்றம். அவர், சேக்கிழார் பெருமான் வாழ்ந்து பெரிய புராணம் இயற்றிய தில்லைக்கு அணித்தாக உள்ள 'கொற்றவன் குடி'யில் வாழ்ந்தவர். ஆதலின், அவர் சேக்கிழார்பால் ஈடுபாடு கொண்டவராய்ப் பெரிய புராணத்தினைப் போற்றி மகிழ்ந்திருப்பார் எனக் கொள்ளுதலில் தடையில்லை. "சேக்கிழார் புராணம்" "திருமுறைகண்ட புராணம்" என்பன உமாபதிசிவத்தின் பெயரால் வழங்குதலும் ஈண்டுக் கருதுதற்குரியது.

சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்றாகிய சங்கற்ப நிராகரணம் என்னும் நூலின் கண், சிவசம வாதியை மறுக்கும் பகுதியில்,

"ஐந்தொழில் உயிரும்
தந்திடல் தகுமே?
ஆவதென்? முன்னாள்
நாவலர் பெருமான்
பண்டொரு முதலை
யுண்டமைந் தனைவர

அழைத்தனன் என்றாய்!
பிழைப்பிலது அதூஉம்!
தந்திட வேண்டும்
என்றனர் அன்றே?''

எனச் சுந்தரமூர்த்திசுவாமிகள் முதலையுண்ட மைந்தனை வரவழைத்துத் தந்தருளியதும், ஈசுர அவிகார வாதியை மறுக்கும் பகுதியில்,

''காழி மாநகர்க்
கவுணியர் கடவுள்
ஞானம் ஆகிய
நற்பதி கங்கள்
எழுதுறும் அன்பர்தம்
இன்புறு மொழியால்,
களிறென அணைந்த
கன்மனப் பித்தன்
முருட்டுச் சிரம்ஒன்று
உருட்டினர், அன்றி
வாய்ந்த வாள் ஒன்று
ஏந்தினர் இலரே!

எனச் சம்பந்த சரணாலயர் என்பவர் போதி மங்கைப் புத்தநந்தியின் தலையுருளச் செய்ததும் ஆகிய பெரிய புராண வரலாற்று நிகழ்ச்சிகளை, ஸ்ரீ உமாபதி சிவாசாரிய சுவாமிகள் சுட்டியருளி யுள்ளார். அன்றியும் சைவவாதி மறுப்பில்,

''ஒருபணி செய்யாச்
சிரபுரச் சிறுவரும்
அரச ராகிய
தருணத் தலைவரும்
முதிர்பர சமயத்
திதமுறும் அரசரும்
ஞானம் பெற்ற
நன்மையி னாலும்''

எனத் திருஞானசம்பந்தரும் சேரமான் பெருமாளும் திருநாவுக்கரசரும் ஆகிய நாயன்மார்களையும் முறையே உமாபதி சிவம் குறிப்பிட்டுள்ளார்.

இம்மட்டோ! போற்றிப் பஃறொடை என்னும் சாத்திர நூலில், இறைவனின் அறக் கருணை மறக்கருணைகளைக் குறித்து விளக்குங்கால், பெரிய புராணத்தின் தொடக்கத்தில் சேக்கிழார் சுவாமிகளாற் சிறப்புறச் செவ்விதிற் பாடப் பெற்றுள்ள மனுநீதிச் சோழன் வரலாற்றைத் தக்க முறையில் எடுத்துக் காட்டாகப் பயன்படுத்தியுள்ளார்.

''ஓடியதே ரின்கீழ்
உயிர்போன கன்றாலே
நீடுபெரும் பாவம்இன்றே
நீங்கும்என—நாடித்தன்
மைந்தனையும் ஊர்ந்தோன்
வழக்கே வழக்காக
நஞ்சனைய சிந்தை
நமன்தூதர்—வெஞ்சினத்தால்
அல்ல லுறுத்தும்
அருநரகம் கண்டுநிற்க
வல்ல கருணை
மறம் போற்றி''

இன்னோரன்ன செய்திகளெல்லாம் சேக்கிழார்க்கும் சைவ சித்தாந்த நூல்களுக்கும் உள்ள இயைபுகளைத் தெளிவுற விளக்குவனவாகும்.

இங்ஙனமே, மேலும் பற்பல சான்றுகளைச் சேக்கிழாரிடத்தும், அவர் தம் நூலின் மாட்டும், உமாபதி சிவம் கொண்டிருந்த பேரீடுபாட்டையும் பெரும் பயிற்சியையும் விளக்கித் தெளிவுறுத்த எடுத்துக் காட்டுதல் கூடும்.

''பார்வைஎன மக்களைமுன்
பற்றிப் பிடித்தற்காம்
போர்வை எனக் காணார் புவி''

எனவரும் திருவருட்பயன் செய்யுள், ''கண்ணில் நீடு பார்வை ஒன்று கொண்டு காணும் அன்பர் முன், எண்ணில் பார்வை கொண்டு வேடர் எம்மருங்கும் ஏகினர்'' (720) எனக் கண்ணப்ப நாயனார் வரலாற்றில் வரும் பெரிய புராணச் செய்யுளை நினைப்பிப்பதாகும். இவ்வாறே,

''செய்வானும் செய்வினையும்
சேர்பயனும் சேர்ப்பானும்
உய்வான் உளன்என்று உணர்''

எனவரும் திருவருட்பயன் செய்யுள்,

''செய்வினையும் செய்வானும்
அதன்பயனும் கொடுப்பானும்
மெய்வகையால் நான்காகும்
விதித்தபொருள் எனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி
அல்லவற்றுக் கில்லையென
உய்வகையாற் பொருள்சிவன்என்
றருளாலே உணர்ந்தறிந்தார்''
—3645

எனச் சாக்கிய நாயனர் வரலாற்றில் வரும் சேக்கிழார் திருமொழியின் எதிரொலியே யாகும் என்பதில் ஐயமில்லை.

உமாபதிசிவம் சிவப்பிரகாசம் என்னும் சைவ சித்தாந்த நூலில், ''வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்'' எனவும், ''வேதத் தலைதரு பொருள்'' எனவும் அருளிச் செய்ததற்கு அடிப்படை,

''பண்ணின் பயனும் இன்னிசையும்
பாலின் பயனும் இன்சுவையும்
கண்ணின் பயனும் பெருகொளியும்
கருத்தின் பயனும் எழுத்தஞ்சும்
விண்ணின் பயனும் இன்னிசையும்
வேதப் பயனும் சைவமும்போல்
மண்ணின் பயனும் அப்பதியின்
வளத்தின் பெருமை
வரம்புடைத்தோ? —1219

எனச் சண்டேசுர நாயனர் வரலாற்றில் ஆசிரியர் சேக்கிழார் பெருமான் அருளிச் செய்ததே யாகும்!

## சேக்கிழாரும் அருள்நந்திசிவமும் :

இக் கருத்தினை வலியுறுத்தும் வகையில் ஸ்ரீ அருள்நந்தி சிவாசாரிய சுவாமிகள், ''வேத நூல் சைவ நூல் என்றிரண்டே நூல்கள். வேறு இவற்றின் விரிந்த நூல்கள். ஆதி அனதி அமலன் தருநூல் இரண்டும். ஆரண நூல் பொது. சைவம் அருஞ் சிறப்பு நூலாம். நீதியினல் உலகர்க்கும் சத்திநிபாதர்க்கும் நிகழ்த்தியது. நீள் மறையின் ஒழி பொருள், வேதாந்தத் தீதில் பொருள், கொண்டு உரைக்கும் நூல் சைவம். பிற நூல் திகழ்பூர்வம். சிவாகமங்கள் சித்தாந்தம் ஆகும்'' (சித்தியார், சுபக்கம்: 267) என வரையறுத்து உரைத்தருளியதும், ஆசிரியர் சேக்கிழார் பெருமான் ''வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத் துறை விளங்க'' எனத் திறந்தெரித்து அருளிச் செய்த திருமொழியின் விரிவுரையே எனலாம்.

இஃதொன்றோ! ''சகலாகம பண்டிதர்'' என விளங்கிய ஸ்ரீ அருள்நந்தி சிவாசாரியர், சேக்கிழார் பெருமானை மிகவும் போற்றி, அவர் அருளிய நூலையும் சிறப்புறப் பயின்றிருப்பர் என்பதில் ஐயமில்லை. அதனை விளக்கும் சான்றுகள் பல உள்ளன வேனும், சுருக்கம் கருதி மிக முதன்மை வாய்ந்த ஒன்றிரண்டு சான்றுகளை மட்டும் ஈண்டுக் காண்டல் அமையும். அருள் நந்திசிவம் 'சிவஞான சித்தியார்' என்பதொன்றே யன்றி, இருபா இருபஃது எனப் பிறிதொரு நூலும் இயற்றியுள்ளார். அதன்கண் அவர்,

''காண்பார் யார்கொல்
காட்டாக் கால்எனும்
மாண்புரை யுணர்ந்திலை
மன்ற! பாண்டியன்
கேட்பக் கிளக்கும்
மெய்ஞ்ஞா னத்தின்
ஆட்பா லவர்க்கருள்
என்பதை அறியே''

எனப் போதரும் வரிகளில், திருஞான சம்பந்தர் அருளிய ''வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்'' எனும் திருப்பாசுரத்தினைப் ''பாண்டியன் கேட்பக் கிளக்கும் மெய்ஞ்ஞானம்'' எனப் புகழ்ந்து போற்றி யுரைத்தருளுகின்றார்! இறைவனையோ - உலகுயிர்களையோ - சமணர்களையோ - கருதி இத் திருப்பாசுரம் பாடப் பெருமல், பாண்டியன் கேட்பதற்காகவே கிளக்கப் பெற்றது என அவர் விதந்தெடுத்துக் கூறியதற்குக் காரணம்,

''உலகியல் வேதநூல்
ஒழுக்கம் என்பதும்,
நிலவும்மெய்ந் நெறிசிவ
நெறிய தென்பதும்,

கலதிவாய் அமணர்
காண்கிலார்க ளாயினும்,
பலர்புகழ் தென்னவன்
அறியும் பான்மையால்'' —2723

எனச் சேக்கிழார் பெருமான் கிளந்தெடுத்து மொழிந்தமையினை உட்கொண்டே யாகும். அன்றியும் ''செம்பு இரத குளிகையினுற் களிம்பு அற்றுப் பொன்னுய்ச் செம்பொனுடன் சேரும்; மலம் சிதைந்தால் சீவன் நம்பனுடன் கூடும். நற்குளிகைபோல் அரன் நணுகும் மலம்போக்கி அம்பொன் அடிக்கீழ் வைப்பன்...'' எனவரும் சிவஞான சித்தியார் (சுபக்கம்: 319) செய்யுட் பொருள்,

முன்புதிருக் காளத்தி
முதல்வனுர் அருள்நோக்கால்
இன்புறுவே தகத்திரும்பு
பொன்னுனுற் போல்யாக்கை
தன்பரிசும் வினையிரண்டும்
சாருமலம் மூன்றுமற
அன்புபிழம் பாய்த்திரிவார்
அவர்கருத்தின் அளவினரோ?
—796

எனக் கண்ணப்ப நாயனுர் வரலாற்றில் வரும் பெரிய புராணப் பாடலில், சேக்கிழார் சுவாமிகளால் அரிய முறையிற் சுட்டப்பட்டிருத்தல் காணலாம்.

இனி வேறொன்றும் கருதற்பால துளது. அருள்நந்தி சிவனுர்க்கும், அவர் தம் நூலுக்கும் தனிப்பெருஞ் சிறப்பைத் தருவது, சிவஞான சித்தியார் பரபக்கப் பகுதி. அருள்நந்தி சிவனுர் உண்மையிலேயே ''சகலாகம பண்டிதர்'' தான் என்பதனை மெய்ப்பித்து விளக்கி நிற்பது பரபக்கப் பகுதியே யாகும். இங்ஙனம் பரபக்கப் பகுதி ஒன்றினை இயற்றுதல் வேண்டும் என அருள்நந்திசிவம் கருதுதற்கும், அஃது இயற்றும் நெறி இதுவென உணர்தற்கும் வழிகாட்டியவர் சேக்கிழார் சுவாமிகளே யாவர் எனலாம். பரபக்கப் பகுதியில் அருள்நந்திசிவம் விரிவாக மறுத்துரைத்திருப்பது, மாத்தியமிகர் யோகாசாரர் சௌத்திராந்திகர் வைபாடிகர் என்னும் நால்வகைப் பௌத்தர்களில், சௌத்திராந்திகர் என்னும் பிரிவினரையே யாகும். ஆசிரியர் சேக்கிழார் பெருமான் இக்கொள்கையினரையே, திருஞான சம்பந்தர் வரலாற்றில் (செய்யுள் 914 முதல் 921 வரை) 'சம்பந்தசரணுலயர்' எனப்படும் அன்பர் ஒருவரின் கூற்றில் வைத்துத் திட்ப நுட்பமும் சுருக்க விளக்கமும் அமையத் திறம்பட மறுத்துரைத் துள்ளார். இவ்விரு பகுதிகளையும் புடைபட வைத்து ஒப்பிட்டுக் காணவல்லார் ''சகலாகம பண்டிதர்'' ஆகிய அருள்நந்திசிவனுர், சேக்கிழார் பெருமானைப் போற்றியுள்ள திறமுணர்ந்து பெரிதும் மகிழ்வர் என்பது தேற்றம்.

## சேக்கிழாரும் மெய்கண்டசிவமும் :

இனி, மெய்கண்டார் பற்றி ஒரு சிறிது ஆராய்தல் வேண்டும். மெய்கண்ட தேவர் சேக்கிழார்க்குப் பிற்பட்டவர் என்பதே, திரு. கோபிநாதராவ் போன்ற வரலாற்று ஆராய்ச்சியாளர்களின் துணிபு. ''திருவெண்ணெய் நல்லூருடையான் மெய்கண்டதேவன் ஊருடைய பெருமாளான எடுத்தது வலிய வேளார்'' எனத் திருவண்ணுமலைக் கோயிலிலுள்ள கல்வெட்டு ஒன்று இவரைக் குறிப்பிடுகின்றது. மெய்கண்ட தேவர் தமது கொள்கைகளைத் திறம்பட எடுத்து நிறுவ வல்லவராகத் திகழ்ந்த சிறப்புப் பற்றி ''எடுத்தது வலிய வேளார்'' எனப் பாராட்டி யுரைக்கப் பெற்றனர் போலும்! இக் கல்வெட்டின் வாயிலாக மெய்கண்ட சிவத்தின் காலம் கி. பி. 1232 என்று ஐயுறவின்றித் துணியப்பட்டுள்ளது. ஆதலின், அக்காலத்தில் வாழ்ந்திருந்த ஆசிரியர் மெய்கண்டதேவர் பெரிய புராணத்தினை உரிய முறையிற் போற்றி மகிழ்ந்திருப்பர் எனக் கொள்ளுதலில் இழுக்கொன்றும் இல்லை. ''சான்றோர் சான்றோர் பாலர் ஆப'' என்பது சான்றோர் கூறிய வாய்மை. ''ஞானத்தால் தொழுவார்கள் தொழக்கண்டு ஞானத்தாய் உனை நானும் தொழுவேனே'' என நாவரசர்

நவின்றிருப்பதும், இக்கருத்துக்கு அரண் செய்யும். இவ்வடிப்படையில் ஆராய்ந்தால், மெய்கண்டதேவர் பெரிய புராணத்தின் தெளிபொருட் பெரும் பிழிவினையே வடித்தெடுத்து,

''செம்மலர் நோன்றாள்
சேரல் ஒட்டா
அம்மலங் கழீஇ
அன்பரொடு மரீஇ
மாலற நேயம்
மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும்
அரன்எனத் தொழுமே''

எனத் தமது 'சிவஞானபோதம்' என்னும் சைவ சித்தாந்தத் தலைமணி நூலின் கண், இறுதிச் சூத்திரமாக அமைத்துள்ளார் என்பதனை, ஐயுறவின்றி அனைவரும் உணர்வர்.

நம்பியாரூரர் ஆகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள், தம்மைத் தடுத்தாட் கொள்ளப் போந்த சிவவேதியரின் பின்னே தொடர்ந்து, திருநாவலூரினின்று திருவெண்ணெய் நல்லூர் வேதபாரகரின் மிக்கார் விளங்கு பேரவையை நோக்கிச் செல்லுதலைக் கூறலுறும் பகுதியில்,

''செல்லுமா மறையோன் தன்முன்
திரிமுகக் காந்தம் சேர்ந்த
வல்இரும்பு அணையு மாபோல்
வள்ளலும் கடிது சென்றார்'' —196

எனச் சேக்கிழார் பெரிய புராணத்துட் பாடிய செய்யுளைத் தழுவியே, அதனை நினைப்பிக்கும் வகையில், ''தாம் தம் உணர்வின் தமியருள் காந்தம் கண்ட பசாசத் தவையே'' என்னும் சிவஞானபோதச் சூத்திரப் பகுதி அமைந்திருத்தல் காணலாம்.

### திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார்:

இனி, மெய்கண்ட தேவரின் சிவஞானபோதத்திற்கும் முற்பட்டனவாகக் கருதப் பெறுவன, திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் என்னும் சைவசித்தாந்த சாத்திரங்கள் ஆகும். இவைகள் முறையே திருவியலூர் உய்யவந்த தேவநாயனார், திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் என்னும் சான்றோர்களால் இயற்றப் பெற்றன. அருள்நந்தி சிவமும் உமாபதி சிவமும் தம் நூல்களில் மெய்கண்ட தேவரைப் போற்றியிருத்தல் போல, இவர்கள் போற்றக் காணாமையினால், இவ்விருவிரும் மெய்கண்ட சிவத்திற்குப் பிற்பட்டவராகாமல் ஒரு சிறிது முற்பட்டவர்கள் ஆதல் வேண்டும். இருவரும் ஆசிரிய மாணவ முறையில் உடனுறைந்து ஒரே காலத்தினராகத் திகழ்ந்தவர்கள். திருக்களிற்றுப்படியாரில் சேந்நனார் வரலாறு (53) குறிக்கப்படுதலின், அதனை இயற்றியருளிய ஆசிரியரின் மேலெல்லைக் காலம் 10ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டதாகாது. கீழெல்லைக் காலம் யாதாக இருத்தல் கூடும் என ஆராயும் வழி, ''ஊட்டி யறுத்தவர்க்கே ஊட்டி யறுத்தவரை நாட்டியுரை செய்வதென்னோ நாம்?'' என்னும் திருக்களிற்றுப்படியார் செய்யுள் (20),

ஆட்கொளும் ஐயர் தாம்இங்கு
அமுதுசெய் திலர்கொல் என்னப்
பூட்டிய அரிவாள் பற்றிப்
புரையற விரவும் அன்பு
காட்டிய நெறியின் உள்ளந்
தண்டறக் கழுத்தி னோடே
ஊட்டியும் அரியா நின்றார்
உறுபிறப்பு அரிவார் ஒத்தார்''
—924

என்னும் பெரியபுராணப் பாடலின் அடியொற்றி அமைந்திருத்தல் அறியப்படுகின்றது.

ஆதலின் மூலநூல் போலத் திகழும் திருவுந்தியாரும், அதற்கு ஓர் அழகிய உரைபோல அமைந்துள்ள திருக்களிற்றுப்படியாரும், பெரிய புராணத்திற்குப் பிற்பட்டதாதல் தெளியப்படும். இவற்றின் காலம் முறையே கி. பி. 1147 என்றும், கி. பி. 1177 என்றும் கொள்ளப்பட்டுள்ளது. 'திருச்சிலம்போசை' 'பெற்ற சிற்றின்பமே' என்னும் திருவுந்தியார் செய்யுட்கள் முறையே சேரமான் பெருமாள் நாயனார்,

சுந்தரமூர்த்தி சுவாமிகள் என்பவர்களை நினைவூட்டி நிற்கின்றன எனலாம். திருக்களிற்றுப்படியாரிலோ பற்பல நாயன்மார் வரலாறுகள் குறிப்பிடப் பெற்றுள்ளன. அப்பர், சம்பந்தர், சுந்தரர் என்பவர்களே யன்றி, அதன்கண் சிறுத்தொண்டர் சண்டீசர் அரிவாட்டாயர் கண்ணப்பர் திருக்குறிப்புத் தொண்டர் கோட்புலியார் மூர்த்தியார் மூர்க்கநாயனுர் மங்கையர்க்கரசியார் என்பவர்களைச் சுட் டும் பாடல்கள் பலவும், திருக்களிற்றுப்படியாரில் இருக்கின்றன.

மேலும் இந் நாயன்மார்களின் வரலாறுகளைப் பெரிய புராண வாயிலாக அறிந்துணர்ந்த அரும்பெறற் பயன்போல, அவர்தம் செயல்களை யெல்லாம் மெல்வினை என்றும், வல்வினை என்றும் பாகுபாடு செய்து,

**மெல்வினையே என்ன**
**வியனுலகில் ஆற்றரிய**
**வல்வினையே என்னவரும்**
**இரண்டும்—சொல்லில்**
**சிவகன்ம மாம். அவற்றிற்**
**சென்றதிலே செல்வாய்**
**பவகன்மம் நீங்கும் படி**

எனப் பெரிய புராண வரலாறுகளில், சிலர் கொள்ளும் ஐயம் பொருந்தா வகையையும், திறம் தெரிந்து உணர்த்தித் தெளிவித்திருக்கும் முறை, பெரிதும் வியந்து போற்றற் பாலது.

பேராசிரியர் வில்லியம் ஜேம்ஸ் (Prof. William James) என்னும் உளநூற் பேரறிஞர், மக்களையெல்லாம் 'மெல்லிய உள்ளத்தினர்' (Tender-minded) என்றும், 'கடின உள்ளத்தினர்' (Tough-minded) என்றும் இருதிறத்தினராகப் பிரித்து ஆராய்ந்திருப்பது, ஈண்டு இதனேடு ஒப்பிட்டுக் கருதி மகிழத் தகுவது. இவைகளெல்லாம் சந்தானுசிரியர்கள் சைவசித்தாந்தக் கொள்கைகளை உருவாக்கித் தொகுத்துத் தருதற்குச் சேக்கிழாரும், அவர்தம் பெரிய புராணமும் பயன்பட்ட திறனைத் தெள்ளிதின் விளக்கவல்ல சான்றுகள் எனலாம்.

**சித்தாந்த உள்ளுறைப் பொருள் :**

இனி, வேறெரு நெறியிலும் இப்பொருள் குறித்துப் பேசி விளக்குதல் கூடும். பெரிய புராண வரலாறுகள் உண்மையில் நடந்த நிகழ்ச்சிகளேயாகும். எனினும், அந்நிகழ்ச்சிகளைப் பாடும் முறையிற் சிற்சில வரலாறுகளில் சைவசித்தாந்த நுண்பொருட் கருத்துக்கள் பொலிந்து புலனுகும்படி, சேக்கிழார் தமது ஒப்புயர்வற்ற தெய்வப் பெற்றிமை மிக்க புலமையினுற் செய்துள்ளனர். அவற்றை விளக்க விரும்பி விரிப்பிற் பெருகுமாயினும், ஈண்டு ஒரு சிறிது சுருங்கக் கூறி முடிப்பல்.

எறிபத்நர் வரலாறு யாவரும் இனிதறிந்தது. அதன்கண் கருவூர், உடல். ஆனிலை புருவநடு. பசுபதி சிவபிரான். சிவகாமியாண்டார் பக்குவம் எய்திய நல்லுயிர். பூக்குடலை மனம். பூக்கள், கொல்லாமை ஐம்பொறியடக்கம் பொறுமை இரக்கம் அறிவு மெய் தவம் அன்பு என்னும் எண்வகை நல்லெண்ண மலர்கள். சிவகாமியாண்டார் தமது மலர்க்கையில் கொண்டு சென்ற தண்டு, யோகப் பயிற்சிக்குரிய 'வீணுதண்டு' (Spinal chord). யானை ஆணவமலம். பாகர் இருவரும், இருவினைகள். பரிக்காரர் மூவரும், சுத்தம் அசுத்தம் சுத்தாசுத்தம் என்னும் மூவகை மாயைகள். சோழ அரசன் திரோதானசத்தி. எறிபத்நர் ஞானுசிரியர். அவர் தாங்கியிருந்த பரசு, ஞானம் என்னும் வாள் என, இங்ஙனமெல்லாம் உள்ளுறைப் பொருள் (Allegorical significance) கொள்ளவும், பல குறிப்புக்கள் சேக்கிழார் சுவாமிகள் பாடலில் அமைந்துள்ளமை காணலாம்.

இங்ஙனமே கண்ணப்பர் வரலாற்றிலும் நாகன் ஆணவம். தத்தை மாயை. காடன் கன்மம். நாணன் மாயேயம். கண்ணப்பர் பக்குவம் பெற்ற சுத்தான்மா. காளத்தி முதல்வர் திருநோக்கம், சிவதீக்கை. சிவகோசரியார் திரோதாயி என்னும் சத்தி. ஆறு நாட்கள் தொண்டியற்றல், வன்னம் பதம் மந்திரம் கலை தத்துவம் புவனம் என்னும் ஆறு அத்துவாக்களும் தூய்மையடைதல் என, நுண்பொருள்கள் பலகொள்ளத்தக்க

குறிப்புக்கள் அமைந்திருத்தலும், ஈண்டு அறிந்து இன்புறற்பாலது.

முடிவுரை :

சேக்கிழார் சுவாமிகள் மிகச் சிறந்த ஒரு சைவ சித்தாந்த ஞானுனுபவப் பெருஞ் செல்வர். 'கலையின் கண் மனிதன் தான் வெளியிட மேற் கொண்ட பொருள்களை யன்றி, ஒருவகையில் தன்னையே வெளிப் படுத்தி விடுகின்றான்' ("In art, man reveals himself and not his objects") என்று கலையா ராய்ச்சி யறிஞர்கள் கட்டுரைப்பதுண்டு. அவ் வுண்மைக்கு ஏற்ப, நமது அருமைச் சேக்கிழார் பெருமானும் தமது சைவ சித் தாந்த ஞானுனுபவத்தினையே, சுந்தர மூர்த்தி சுவாமிகள் தில்லைக்குச் சென்று கூத்தப் பெருமானைத் தரிசித்து மகிழ்ந்த தன்மையினை விளக்கும் பகுதியில்,

"ஐந்துபே ரறிவும்
  கண்களே கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்கும்
  சிந்தையே ஆகக்
குணம்ஒரு மூன்றும்
  திருந்துசாத் துவிகமே ஆக
இந்துவாழ் சடையான்
  ஆடும் ஆனந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
  வந்தபே ரின்ப
வெள்ளத்துள் திளைத்து
  மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தர்"
—252

தெண்ணிலா மலர்ந்த
  வேணியாய் உன்றன்
திருநடம் கும்பிடப் பெற்று
  மண்ணிலே வந்த
பிறவியே எனக்கு
  வாலிதாம் இன்பமாம் என்று
கண்ணிலா னந்த
  அருவிநீர் சொரியக்
கைம்மலர் உச்சிமேற் குவித்துப்
  பண்ணினல் நீடி
அறிவரும் பதிகம்
  பாடினர் பரவினர் பணிந்தார். —253

எனவரும் பெரிய புராணப் பாடல்கள், சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பக்திஞானனு பவ நலங்களை விளக்குவனவாகப் பாடப் பெற்றிருப்பினும், சேக்கிழார் பெருமானின் சிறந்த பக்தியுணர்வும் சிவஞானனுபவத் திறங்களும்கூட, ஒரு வகையில் இப்பாடல் களால் உணர்த்தப் பெறுதல் காணலாம்.

இன்னேரன்ன செய்திகள் பலவும், சேக்கி ழார்க்கும் சைவ சித்தாந்தத்திற்கும் உள்ள பல திற இயைபுகளை நலமுறத் தெளி விக்கும் சிறந்த சான்றுகள் ஆகும். இவை போல் வன வற்றை ஆராய்ந்துணர்தல், நம்மனேர் அறிவிற்குப் பெருவிருந்தாக அமைவதுடன், நம் ஆன்மநலத்திற்கும் பெருந்துணை புரியும்.

"செப்ப லுற்ற
  பொருளின் சிறப்பினல்
அப்பொ ருட்குரை
  யாவரும் கொள்வரால்;
இப்பொ ருட்கென்
  னுரைசிறி தாயினும்,
மெய்ப்பொ ருட்குரி
  யார்கொள்வர் மேன்மையால்"
—(7)

"மதிவளர் சடைமுடி
  மன்று ளாரைமுன்
துதிசெயும் நாயன்மார்
  தூய சொல்மலர்
பொதிநலன் நுகர்தரு
  புனிதர் பேரவை
விதிமுறை உலகினில்
  விளங்கி வெல்கவே" —(4)

[திருக்குவளை என வழங்கும் திருக்கோளி லியில், ஸ்ரீ அவனிவிடங்க தியாகராஜ சுவாமி தேவஸ்தானத்தில், மகா கும்பாபி ஷேக விழா நிகழ்ந்த ஞான்று (29—6—64), ஆற்றிய சொற்பொழிவைத் தழுவி எழுதியது.]

—ஆசிரியர்



# பறவைகள் செய்த பாக்கியம்

திரு. என். எஸ். தாத்தாச்சாரியார், தஞ்சை.

கடலை (க்) கலக்கி அமுதம் அமரர்க்கு அளித் தான் களித்தார்
குடலை(க்) கலக்கும் குளிர் சங்கினன் குறையா மறையின்
திடலை(க்) கலக்கி(த்) திருவாய் மொழிஎனும் தேனைத் தந்தான்
நடலை(ப்) பிறப்பறுத்து என்னையும் ஆட்கொண்ட நாயகனே.

—சடகோபர் அந்தாதி

'சித்' என்ற சொல்லால் குறிக்கப்படும், 'ஜீவாத் மாவை' பெண்ணாகவும், ஈசுவரன் என்ற சொல்லால் குறிக்கப்படும் பரமாத் மாவைக் கணவனாகவும் கூறுவது வைணவ சித்தாந்தத்தின் மரபு. இறைவனுடன், இந்த ஜீவாத்மாவிற்கு ஏற்பட்ட தொடர்பு பிரிக்க முடியாதது. இதை 'அப்ருதக் சித்த விசேஷணம்' என்றும் கூறுவார்கள். எம்பெருமானுக்கும் நமக்கும் ஏற்பட்ட தொடர்புகளை 9 வகையில் பெரியோர் எடுத்துரைப்பர். அந்த ஒன்பான் தொடர் பில் 'தலைவன்—தலைவி' என்ற ('பர்த்ரு—பார்யா') தொடர்பு நம் போன்ற ஸம்ஸாரி களுக்கு எளிதில் புரியும் வண்ணமாகவும் போற்றும் வண்ணமாகவும் அமையும் என் பதில் ஐயம் இல்லை. 'அடியேன்' என்று கூறும் வாயிலாக, நாம் எப்பொழுதும் எம் பெருமானுக்கே ஆட்பட்டு, அவனுக்குக் குற்றேவல் புரிவதே, நமக்குற்ற வைணவ இலக்கணம் என்றும் காட்டுவார்கள் திரு மாலடியார்கள். திருமணமான பெண்ணிற் குத் திருமாங்கல்யம் போலேதான், ஸ்ரீவை ணவனுக்கு 'கண்ணனுக்கேயாவது காமம்' என்ற மனப்பான்மை. இதையே பாரதந் த்ர்யம், (அடிமைப் பட்டிருத்தல்) என் பார்கள். ஆதலால்தான் ஜீவாத்மா வைகுந்தம் செல்வதையும், அங்குச் சென்று விண்ணோர் விரும்பி அழைத்துச் செல்ல, பரமாத்மாவான திருமாலை அடை வதையும், பெண் தன் புக்ககம் செல்வ தற்கு ஒப்பாகும் எனவும் ஆழ்வார் அடிச் சுவட்டில் படிந்துறையும் பெரியோர் உரைப்பர். ஸ்ரீ வைணவ சித்தாந்தத்தை 'அந்தப்புர சித்தாந்தம்' என்றழைப் பதின் நோக்கத்திலும் இந்த உண்மை கலந்திருக்கிறது. இதனாலேயே தான் பெருமாள் திருமொழி 5—2 ல் 'கண்டார் இகழ்வனவே காதலன்தான் செய்திடினும் கொண்டானை அல்லால் அறியாக்குலமகள் போல்' எனக் கற்புடைய பெண் போன்ற பக்தனுடைய பெருமை பேசப்படுகிறது. 'பறவை ஏறு பரம புருடா! நீ என்னைக் கைக் கொண்ட பின்' எனவும் 'ஊரவர் கவ்வை யெருவிட்டு, அன்னை சொல் நீர் படுத்து, ஈர நெல் வித்திமுளைத்த நெஞ்சப் பெருஞ் செய்யுள், பேரமர் காதல் கடல் புரைய விளைவித்த காரமர் மேனி' என்ற படியும் நாக்குத் தித்திக்கப் பேசிய ஆழ்வார் களின் நல்லுரைகளே, ஜீவாத்மாவான தமக்கும், பரமாத்மாவான திருமாலுக்கும் ஏற்பட்டிருக்கும் நிலைத்த திருமணத் தொடர்பை வெளிப் படுத்துகின்றன. 'அழகிய மணவாளன்' 'கல்யாண வேங்க டேசன்' 'பீதகவாடைப் பெருமாள்' என் றெல்லாம் அவன் திருப்பெயர்கள் கல்யாண கோலத்தை வெளிப்படுத்துகின்றன அல்லவா? அவன் அணிந்திருக்கும் 'பீதாம் பரம்' என்ற மஞ்சள் பட்டும், மஞ்சள் தோய்த்த ஆடை அணியும் மருமகப்பிள் ளையை நினைவுபடுத்து கிறதன்றோ? இரா மாயணத்திலும், பிரிந்த தம்பதிகளான சக்ரவர்த்தித் திருமகனையும், சீதையையும்

சேர்த்துவைப்பதுபோல் காட்டிய அனுமன் நிலையைத் திருமணம் முடித்துவைக்கும் ஆசான் நிலையாகக் கூறப்பட்டுள்ளது. ஜீவாத்மாவான நம்மைத் திரும்பிப் பெறுவதில், இராமன் பம்பை ஆற்றங்கரையில் பட்டபாட்டையே, திருமாலும் அடைந்திருக்கிருன். ஆள் தேடித்திரியும் ஆரமுதமன்றே அது? ஜீவாத்மாவான நம்மிடம் அவன் வைத்திருக்கும் பெருங் காதலைப் பற்றிப் பேசும் பொழுது பிராட்டி தன்னையே (லக்ஷ்மி) அடகு கொடுத்தாலும், அவன் நம்மை விடகில்லான் என்றும் கூறுவார்கள். இந்தத் தலைவன் தலைவி நிலையே அவனை அடையச் சீரிய சுருக்கு வழி என்று உணர்ந்தவர்களில், நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் முன் நிற்பவர்கள். அதிலும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குக் கூடஸ்தரான (முதல் வழிகாட்டியான) நம்மாழ்வார், இறைவன்பால் தூதுவிட்டுத் தன் நிலையைத் தானே விளக்கிக் கூறுவதாக அமைந்தது,

“அஞ்சிறைய மட நாராய்!
அளியத் தாய் நீயும் நின்
அஞ்சிறைய சேவலுமாய்
ஆவாவென் றெனக் கருளி
வெஞ்சிறைப் புள்ளுயர்த் தார்க்கு
என்விடுதூ தாய்(ச்)சென்றக்கால்
வஞ்சிறையில் அவன் வைக்கில்
வைப்புண்டால் என்செய்யு மோ?”

என்னும் பாசுரம். ‘விடுதூது’ என்பது தமிழ்ப் பிரபந்தங்கள் 96ல் ஒரு வகையாகும். ஆழ்வாரும் தமிழ்ப் ப்ரபந்த வழியிலே சென்று தூது விடுகிருர். இது தரிக்க இயலாத தெய்வக் காதல். தூதுவிடுவதின் குறிக்கோளாக நெஞ்சில் கொள்ளப்பட்டவனே, ஊழிமுதல்வன். பெரும்பாலும் ஆண்களே தூதுவிடுவதாயினும், இந்த இடத்தில் பராங்குச நாயகி என்ற பெண்ணுன தன்மையால் ஆழ்வார் தூது விடுகிருர். காதலர் நிலையானது ‘மறுத்தாலும்’ அவனிடமிருந்து அச்சொல் பெற்ருல் போதும் என்று விரும்பி இருப்பது என்ற உண்மையை ‘பாவி நீ என்று ஒன்று சொல்லாய், பாவியேன் காணவந்தே’ (நீ பாவி, உன்னைக் காதலித்திலேன் யான் என்ற ஒரு சொல்லையாவது பாவியான என் முன்பு வந்து சொல்லக் கூடாதா) என்று திருமங்கை மன்னனுன பரகால நாயகியின் பேச்சில் காணவேண்டும். நம்மாழ்வார் திருவாய்மொழியில் திருமால் பால் தூது விடும் இடங்கள் 4 வருகின்றன. இவை நான்கிலும் திருமாலுடைய ‘பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை’ என 5 நிலைகள் நினைக்கப்படுகின்றன என்பர் பெரியோர்.

‘அஞ்சிறைய’ என்ற சொல்லில் காணும் நயத்தை முன் இதழில் கூறினேம். அதன் பின் ‘மடநாராய்’ என்று நாரையை ஆழ்வார் கூப்பிடுகிருர். ‘மட’ என்ருல் ‘மடப்பம்’ எனப் பொருள். சொன்னபடி மனம் இளகிக் கேட்டிடும் தன்மையையும் குறிக்கும்.

பெண் தன்மை என்றும் பொருள் கொள்ளலாம். அப்பொழுது, தலைவனை விட்டுப் பிரிந்து வாடும் ஒரு பெண்ணின் நிலையை நன்ருக உணரக்கூடிய பெண் நாரையே! என்றும் பொருள் நயம் அறியக்கிடக்கிறது.

‘அளியத்தாய்—இரக்கமுடையவளே! திருமால் தன்னைக் காட்டி மறைந்து நின்ற அளவிலும் தரியாமனம் கொண்ட ஆழ்வாருக்கு ‘இதோ நான் இங்குற்றேன்’ என்னுமாபோலே எதிரில் நின்று முகம் காட்டும் வண்ணம் கருணைகொண்டதாம் நாரை. இந்த இடத்தில் ஈட்டில் ஓர் நயமும் குறிக்கப்பட்டுள்ளது. ‘வழிப்பறிப்பார் கையிலே அகப்பட்டு நிற்க, தாய் முகத்திலே விழித்தாற்போலே’ என்று ஆழ்வார் பிராட்டியினுடைய (லக்ஷ்மியினுடைய) கண்ணுக்கும் முகத்துக்கும் போலியான செங்கழுநீர் தாமரைப்பூ முதலானவற்ருலே நெஞ்சுபறி உண்டிருக்கும் நேரத்தில், நாரை வந்து நின்றது. தாய் முகத்தில் விழித்ததிற்கு ஒப்பாகுமாம். ‘நீயும்.........சேவலுமாய்’ சேவலிடம் கார்யம் கொள்ளவேண்டுமாயின் பேடையை முன்னிட்டுத்தான் கார்யம் செய்துகொள்ள வேண்டும்.

(தொடரும்)



சென்னை பூக்கடை ஸ்ரீ சென்ன மல்லீஸ்வரர் தேவஸ்தானத்தில், ஸ்ரீ கோதா முல்லாஸினி சபையின் ஆதரவில், ஸ்ரீமதி சிவானந்த விஜயலக்ஷ்மி அவர்கள் ஆற்றிவந்த திரிவேணி இராமாயணம் விரிவுரை நிகழ்ச்சியில், சீதா கல்யாண வைபவம் கொண்டாடப் பெற்றபோது, மணலி திரு. S. இராமகிருஷ்ண முதலியார், B.A. அவர்கள் தலைமை வகித்தார்கள்.

(17-6-64)

